கழக வெளியீடு: கூஅஅ

# இலக்கிய அமைச்சர்கள்



ஆசிரியர் :

திருக்குறள்மணி, வித்துவான், செஞ்சொற்புலவர்

**திரு. அ. க. நவநீதகிருட்டிணன்**

தமிழாசிரியர், ம. தி. தா. இந்துக்கலாசாலை, திருநெல்வேலி



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை - 1.

# பதிப்புரை

வீடும் நாடும் வியத்தகு முறையில் விழுமியதாக நிகழ்வதற்கு மதியமைச்சர் இன்றியமையாதவராவர். வீட்டுக்கு வாய்ந்த அமைச்சர் வாழ்க்கைத் துணைவியராவர். நாட்டுக்கு வாய்ந்த நல்லமைச்சர் வேந்தற்கு வேண்டும். ஆறுறுப்புகளுள் முதற்கண் நிற்குமுதன்மையராவர். வாழ்க்கைத் துணையை "விறல் மந்திரி மதியும்" எனச் சிறப்பித்துக் கூறுவர் ஆன்றோர்.

ஆட்சித் தலைவர்க்கு அமைச்சர் நண்ணரிய கண்ணும் போர்வையும் போன்றுள்ளார். அவ்வமைச்சர்கள் சொல் வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல் வகை முதலிய நற்பண்புகள் வாய்ந்த நல்லோராயிருத்தல் வேண்டும். ஆட்சித் தலைவர்களும் அமைச்சர் சொல்வழி நிற்றல் வேண்டும். மாணவரும் நோயாளரும் முறையே ஆசிரியர் சொல்வழியும் மருத்துவர் சொல்வழியும் நின்றொழுக அறிவும், உடல்நலமும் செறியப்பெற்றுத் திகழ்வர். அதுபோல் ஆட்சித் தலைவரும் அமைச்சர் சொல்வழி நிற்க நலமெய்துவர். நாடும் செழித்து முன்னேற்றமெய்தும். அத்தகைய அமைச்சர் எத்தகையவராக இருப்பரென்பதனை இந் நூலாசிரியர் நன்கெடுத்து விளக்கியுள்ளனர். அங்ஙனங் கூறியவற்றுள் பழமொழி நூலாசிரியர் கூறியுள்ள தாயரொப்பும், குமரகுருபர முனிவரனார் கூறியுள்ள யானைப்பாகரொப்பும் ஊன்றி உன்னற்குரியன.

மேலும் இந்நூல் "தயரதன் அமைச்சர், மனுவேந்தனமைச்சர், அழும்பில்வேள், ஔவையார், குலச்சிறையார்

## இலக்கிய அமைச்சர்கள்

திருவாதவூரர், சச்சந்தன் அமைச்சர், அருண்மொழித் தேவர் முதலிய சான்றோர் பலரின் அமைச்சுத் திறனும் அதனால் நாட்டுக்கும் மொழிக்கும், நன்னெறிக்கும் விளைந்த சீர்சிறப்புக்களும், தெளிவுற எடுத்து இதன்கண் விளக்கப் பட்டுள்ளன. இவற்றிற்கு வேண்டும் அகப்புறச் சான்றுகள் மிகப்பலவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இதனால் அமைச்சர்கள் பலரின் வரலாறுகளும், அக்காலத்திருந்த தமிழக வரலாறும், மன்னர் பலரின் வரலாறுகளும் இதன்கண் திகழ்கின்றன. பின்னும் இதன்கண் அறிஞர் கூறும் அமிழ்தினுமினிய அறவுரைகளும் பல காணப்படுகின்றன. இந்நூல் உயர்நிலைப்பள்ளித் துணைப்பாடமாக வைத்தற் குரிய தகுதி வாய்ந்தது.

கழகத்தார் விருப்பத்தின்படி இந் நூலை ஆக்கித்தந்த ஆசிரியர், திருநெல்வேலி ம. தி. தா. இந்துக் கலாசாலைத் தமிழாசிரியர் திருக்குறள்மணி, வித்துவான், செஞ்சொற் புலவர், திரு. அ. க. நவநீதகிருட்டிணன் அவர்கட்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக. மேலும், இந் நூலை இயற்றிய ஆசிரியர் எழுதிய பலதுறை நூல்கள் கழக வாயிலாக வெளிவந்துள்ளன. அவை பள்ளியிலும் நூல் நிலையங்களிலும் விழைவொடு பயிலப்படுவதை யாவரும் அறிவர்.

இந்நூலைக் கல்வித்துறை முதன்மையரும் ஆசிரிய மாணவர்களும் பெற்றுப் போற்றித் துணைபுரிவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# அணிந்துரை

குடியரசு பெற்ற திருநாடாகிய நம் பாரதத்தை இன்று ஆளுவோர் அமைச்சர்களே. அவர்கள் வழிவழியாக நாடாண்ட அரச மரபினரல்லர்; வாழையடி வாழையாக அமைச்சுரிமை பூண்டு அரசு செலுத்துவோருமல்லர்; நாட்டு மக்களின் நல்லாதரவைப் பெற்று நாடாளும் பீடத்தில் ஏறியவர். அந்த உரிமையைப் பெறுவதற்கு இந்நாட்டில் தோன்றிய ஒவ்வொரு மகனுக்கும் மகளுக்கும் தகுதியுண்டு.

'ஏடு தூக்கிப் பள்ளியில் இன்று பயிலும் பையனே, நாடு காக்கும் தலைவனாய் நாளை வரப்போகிறான்' என்று பாடினார் ஒரு பசுந்தமிழ்க் கவிஞர். இன்றைய மாணவர்களே எதிர்கால மதியமைச்சர்கள். அத்தகைய சிறப்பை எய்துதற்குரிய இளைஞர்கள், நம் பண்டை இலக்கியங்களில் கண்டு அறியலாகும் அமைச்சர்களைப் பற்றியும், அவர்கள் அரசியல் நடாத்திய ஆற்றலைப் பற்றியும் அறிந்து கொள்ளுதல் சிறந்த பயனளிப்பதாகும். அக் கருத்துடனேயே 'இலக்கிய அமைச்சர்கள்' என்னும் இந் நூலை எளிய உரை நடையில் ஆக்கினேன். இதனை வெளியிட்டு, என்னைத் தமிழ்ப்பணியில் எந்நாளும் ஊக்கிவரும் உயர் நோக்கினராகிய கழக ஆட்சியாளர்—கன்னித் தமிழ்க் காவலர் வ. சுப்பையாப் பிள்ளையவர்கட்கு எப்போதும் நன்றியுடையேன்.

இந் நூலைக் கண்ணுறும் கலாசாலைத் தலைவர்களும் தமிழ்ப் புலமைப் பெருமக்களும் இதனைத் தத்தம் பள்ளிகளில் பாட நூலாக்கி எளியேனை ஆதரித்தருளப் பணிகின்றேன்.

தமிழ் வெல்க!

அ. க. நவநீதகிருட்டிணன்

# உள்ளுறை

# இலக்கிய அமைச்சர்கள்



## க. இலக்கியத்தில் அமைச்சர்கள்

மன்னரைப் பற்றிய பன்னூல்கள்

உயர்தனிச் செம்மொழியாகிய நந்தம் செந்தமிழ் மொழிக்கண் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட பழமையான இலக்கியங்கள் பல உள்ளன. அவற்றுள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் ஆகிய பழந்தமிழ் நூல்களில் தமிழகத்தை ஆண்ட முடிமன்னர்களாகிய சேர சோழ பாண்டியரைப் பற்றிப் பற்பல செய்திகளைத் தெரிகின்றோம். தமிழில் தோன்றிய முதற் பெருங் காவியமாகிய நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரத்தில் முடிமன்னர் மூவரைப் பற்றி அறிகின்றோம். சீத்தலைச் சாத்தனாரின் செந்தமிழ்ப் படைப்பாகிய மணிமேகலைக் காவியத்தில் மாவண்கிள்ளி என்னும் சோழன் ஒருவனைப் பற்றி உணர்கின்றோம். சீவகசிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி, இராமாயணம், பாரதம், பெரியபுராணம், நைடதம் போன்ற காவியங்களிலும் பாராண்ட மன்னர் பலரைப் பற்றிய செய்திகள் காணப் படுகின்றன.

அரசியல் துணைவர் அமைச்சர்

இங்ஙனம் காவியம் போற்றும் காவலர் யாவரும் தம் நாட்டை நன்முறையில் ஆளுதற்குத் தக்க துணைவ

ரைத் தம் அரசவையில் வைத்திருந்தனர். அரசன் ஒரு வனே ஒரு நாட்டின் செய்தி அனைத்தையும் தனியனாய் ஆய்ந்து ஆட்சி நடத்துதல் இயலாத செயலாகும். ஆதலின் நாட்டினை நன்முறையில் அமைத்து இயக்கும் அமைச்சர் பலரைத் தேர்ந்து ஆட்சிப் பொறுப்பை அவர்கள்பால் வகுத்து வழங்கியிருப்பான். அவர்கள் தத்தம் துறையினை நன்கு ஆய்ந்து தக்கவாறு அரசியலை நடாத்துவர். அதனால்தான் நாட்டினை நன் முறையில் அமைத்துக் காக்கும் அருந்திறல் படைத்த அன்னவரை நம் முன்னோர் 'அமைச்சர்' என்று குறித்தனர். இதனை அமாத்தியர் என்னும் வட சொல்லின் திரிபு என்பர் சிலர். அமாத்தியர் என்னும் சொல்லுக்குப் பக்கமிருப்பார் என்பது தக்க பொருள்.

*'அறிகொன்(று) அறியான் எனினும் உறுதி*
*உழையிருந்தான் கூறல் கடன்.'*

என்னும் திருக்குறளில் உரையாசிரியராகிய பரிமேலழகர் உழையிருந்தான் என்னும் தொடர் அமாத்தியர் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு என்று குறிப்பிட்டுள்ளார். அரசனுக்கு உழையிருப்பார் பலருளர். எனினும் உறுதி உரைத்தற்கு உரியார் அவ் அமைச்சரே. அவரும் உழையிருப்பாருள்ளே ஒருவராயினும் உயர்மதி படைத்த ஆட்சி உறுப்பினரை அத்தகு பெயரால் குறிப்பிடுவது சிறப்பன்று. ஆதலின் நாட்டினை அமைப்பவர் நல்லமைச்சராவர் என்று கொள்ளுதலே சாலச் சிறந்த தொன்றாகும்.

### மனையரசும் நாட்டரசும்

மனையறமாகிய ஒரு சிற்றரசை வெற்றியுடன் நடத்துவதற்குக் கணவனாகிய தலைவன் அரசனாவான்.

வாழ்க்கைத் துணைவியாகிய மனைவி மதியமைச்சா வாள். அவர்கள் இருவரும் மனையரசின் இரு கண்கள் போல்வர். ஒருவனின் கண்கள் இரண்டும் ஒன் றையே நோக்குவதுதான் இயல்பு. அவை போன்று காதல் மனையாளும் காதலனும் மாறின்றித் தீதிலா ஒரு கருமத்தைச் செய்வதுதான் உயர்வைத் தரும் என்பர் உயர்ந்தோர். இதைப் போன்றுதான் நாடாளும் பேர ரசிற்கு மன்னனும் மதியமைச்சனும் இரு கண்கள் போல்வர். அவர்கள் இருவரும் ஒருங்கு சேர்ந்து ஆய்ந்து ஒரு செயலைச் செய்தால்தான் அது செம்மை யும் நன்மையும் பயக்கும்.

மனையற வண்டி

இல்லறத்தை வண்டி என்றூர் ஒரு புலவர். வண்டி யில் பூட்டிய காளைகள் இரண்டும் ஒற்றுமையாக இழுத் தால் தான், வண்டி சேரவேண்டிய இடத்தை இடரின் றிச் சென்றடையும். அக்காளைகளில் ஒன்று ஒரு பக்க மும் மற்றொன்று பிறிதொரு பக்கமுமாக இழுத்தால் வண்டி தடம்புரண்டு குடைசாய்ந்து விடும். இதைப் போன்றே மனையற வண்டியில் பூட்டப்பெற்ற காளைகள் மருவியகாதல் மனையாளும் கணவனும் ஆவர். அவர்கள் இருவரும் சேர்ந்து இழுத்தால்தான் அம் மனையற வண்டியும் நன்ருகச் சென்று இன்ப வீட்டு நெறியில் இயங்கும்.

அரசியல் வண்டி

மனையறம் தாங்கும் வண்டியைப் போன்றதே நாடாளும் அரசியல் வண்டி. அதனைச் செங்கோன்மை யாகிய நன்னெறியில் செலுத்துவதற்கு இரு காளைகள் வேண்டும். அக்காளைகளே அரசனும் அமைச்சனும்

ஆவர். இந்த உண்மையைப் பண்டே கண்ட தொண்டைமான் இளந்திரையன் என்னும் மன்னன் பொன்னனைய பாடல் ஒன்றால் புலப்படுத்தினான்.

*'கால்பார் கோத்து ஞாலத்து இயக்கும்*
*காவற் சாகாடு உகைப்போன் மாணின்*
*ஊறின் றாகி ஆறினிது படுமே;*
*உய்த்தல் தேற்றா னாயின் வைகலும்*
*பகைக்கூழ் அள்ளல் பட்டு*
*மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே.'*

உருளையையும் பாரையும் கோத்து உலகில் செலுத்தும் காவலாகிய வண்டியைச் செலுத்துவோன் வல்லவனாக இருத்தல் வேண்டும். அங்ஙனம் இருந்தால் வண்டி ஊறுபாடு இன்றி வழியை நன்றாகக் கடந்து செல்லும். அவன் அவ்வண்டியைச் செலுத்தும் வகையை அறியாவிட்டால் அது நாள்தோறும் பகையாகிய சேற்றிலே அழுந்திப் பெருந்துயரை விளைக்கும். இவ்வாறு கூறிய தொண்டைமான் இளந்திரையன், அரசனை வண்டியைச் செலுத்துவோனாகக் கொண்டான். அரசன் நாடாட்சியாகிய வண்டியைச் செலுத்தினால் அதனை இழுத்துச் செல்லும் காளைகள் அமைச்சர்களேயாவர். ஆகவே அரசன் அமைச்சர் துணையின்றி நாட்டை ஆளுதல் என்பது இயலாத தொன்றே.

அரசியல் அங்கங்கள்

அரசனுக்குரிய அங்கங்கள் ஆறு என்று வகுத்துக் கூறினார் வள்ளுவர். படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்ற ஆறு உறுப்புக்களையும் சிறப்பாகப் பெற்றவன் அரசருள் ஆண் சிங்கம் போன்றவன் ஆவான்.

'படைகுடி கூழ்அமைச்சு நட்(பு)அரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.'

என்பது வள்ளுவர் வாய்மொழி. இவ் உறுப்புக்கள் ஆறனுள்ளும் முதன்மையான இடம் அமைச்சுக்கே கொடுத்துள்ளார். அமைச்சரின் சிறப்பையும் பொறுப்பையும் விளக்குதற்குப் பத்து அதிகாரங்கள் வகுத்துள்ளார்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் தம் அரசியலைப் பொறுப்புடனும் சிறப்புடனும் நடத்துதற்கு ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்னும் இரண்டு ஆட்சிப் பேரவைகளை அமைத்திருந்தனர் என்று பழந்தமிழ் இலக்கியங்களால் அறியலாம். அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், சாரணர் என்ற ஐவருமே ஐம்பெருங் குழுவினர் ஆவர். கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச் சுற்றம், கடை காப்பாளர், நகர மாந்தர், படைத்தலைவர், யானை வீரர், குதிரை வீரர் என்னும் எண்மரும் எண்பேராயத்தார் எனப்படுவர். இவ் இரண்டு ஆட்சிப் பேரவை உறுப்பினருள்ளும் தலைமைச் சிறப்புடையார் அமைச்சர்களே.

## பழமொழி நூலில் அமைச்சர்

பழமொழி நூலை வழங்கிய முன்றுறை அரையனார் என்னும் அரசப் புலவர் ஒருவர் தம் நூலில் அமைச்சரை அன்புடைய தாயர்க்கு ஒப்பிட்டுரைத்தார். கோபத்தால் தாயுடன் சண்டையிட்டுக் கொண்டு பாலுண்ணாத குழந்தையை அத் தாய் அடித்தேனும் பாலுண்ணுமாறு செய்வாள். அவ்வாறு அவள் செய்வது குழந்தையின் நலத்தைக் கருதியே யன்றோ! அஃதேபோல் அமைச்சர் கூறும் நல்லறத்தை ஏற்றுக்கொள்ளாத பொல்லாத

அரசர்க்கு அவ் அமைச்சர்கள் உலக நன்மையைக் கருதி இடித்துரைக்கும் கடப்பாடுடையர் என்று குறிப் பிட்டுள்ளார்.

*'உலப்பில் உலகத்(து) உறுதியே நோக்கிக்*
*குலைத்தடக்கி நல்லறம் கொள்ளார்க்(கு) உறுத்தல்*
*மலைத்தழு(து) உண்ணாக் குழவியைத் தாயர்*
*அலைத்துப்பால் பெய்து விடல்.'*

என்பது அவ் அரசப் புலவரின் பட்டறிவில் எழுந்த பாடலாகும்.

### கச்சியப்பர் காட்டும் அமைச்சர்

கந்த புராணம் தந்த செந்தமிழ்க் கவிஞராகிய கச்சி யப்பர், அமைச்சர் இலக்கணத்தைச் சுருக்கமாக வகுத் துரைத்தார். நன்னெறி காட்டும் பொன்னனைய நீதி களை மன்னவர் செவியில் அவர்கள் வெறுப்பினும் அழல் மடுப்பது போல் சொன்னவரே நல்லமைச்ச ராவர் என்றார் கச்சியப்பர்.

*'மன்னவர் செவியழல் மடுத்த தாம்என*
*நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்*
*சொன்னவர் அமைச்சர்கள்'*

என்பது அவர் வாக்கு.

### குமரகுருபரர் கூறும் அமைச்சர்

நீதிநெறியை விளக்கிய குமர குருபர அடிகளார் அமைச்சரை யானைப்பாகர் என்று குறிப்பிட்டுள்ளார். பாகன் செலுத்தும் நெறியிலேயே யானை பணிந்து செல்லும் பண்புடையது. அத்தன்மையனாகவே அமைச்சன் செலுத்தும் நன்னெறியில் அரசன் செல்ல வேண்டும். மதத்தால் யானை சீறினும் பாகன் வில

காது நின்று அங்குசத்தால் வெருட்டி அடக்குதல் போல மன்னன் மயக்கத்தால் வெகுண்டாலும் அமைச்சன் விலகாது நின்று அவன் செவி சுடுமாறு சீரிய உண்மைகளை நேரிய முறையில் கூறி அறிவு கொளுத்த வேண்டும் என்று குறித்தார் குமர குருபரர்.

இங்ஙனம் தமிழ் இலக்கியங்கள் பலவற்றினும் அமைச்சர் இயல்புகளைப் பரக்கக் காணலாம். அரசன் வரலாறு கூறும் இலக்கியம் அனைத்தினும் அமைச்சரைப் பற்றிய செய்திகளும் இடம்பெற்றே இருக்கும். அம்முறையில் தமிழ் இலக்கியங்களில் காணும் அமைச்சர்கள் சிலரைப் பற்றிய செய்திகளை இந்நூலில் ஆராய்ந்து அறிவோம்.

---

## உ. வள்ளுவர் கண்ட நல்லமைச்சர்

### திருக்குறட் சிறப்பு

தொன்மை வாய்ந்த தமிழகத்திற்கும் தூய்மை வாய்ந்த தமிழ் மொழிக்கும் வையகம் போற்றும் வான் புகழைத் தேடித் தந்தவர் தெய்வப் புலவர் திருவள்ளுவர் ஒருவரே. அவர் அருளிய திருக்குறள் நூலுக்கு ஒப்பாகவோ உயர்வாகவோ உலகில் பிறிதொரு நூல் இன்னும் தோன்றவில்லை என்பது அறிவிற் சிறந்த ஆன்றோர் கண்ட முடிபு. அத்தகைய ஒப்புயர்வற்ற ஒரே நூலைத் திருவள்ளுவர் உலகம் உய்யுமாறு வகுத்தருளினர். அந்நூலுள் அவர் சொல்லாத பொருள் ஒன்றில்லை; எல்லாப் பொருளும் அதன்கண் உள்ளன என்று அறுதியிட்டு உரைப்பர் ஆன்றோர்.

### பல்கலைக் களஞ்சியம்

உலகம் போற்றும் பொதுமறையாகிய திருக்குறள் அறத்தின் திறங்காண விழைவார்க்கு அறநூலாக விளங்கும். அறிவியல் காண விரும்புவார்க்கு அஃதோர் அறிவியல் நூலாகவும் திகழும். வீட்டின்பம் காண விழைவார்க்கு வியத்தற்குரிய ஞான நூலாகவும் அது விளங்கும். இலக்கிய இன்பம் காண எண்ணுவார்க்கு நவில்தொறும் நயந்தரும் நல்லதோர் இலக்கியமாகவும் இருக்கும். காமச்சுவை காணக் கருதுவார்க்கும் கழிபேரின்பம் வழங்கும் கருவூலம் அது. அரசியல் நுட்பம் காண முற்படுவாருக்கு அஃதோர் அரிய அரசியல் நூலாகவும் மிளிரும்.

### வள்ளுவர் அரசியல் தொடர்பு

வள்ளுவர் என்பார் அரச மரபினர் என்றும் அரசரைச் சார்ந்து அரசியல் பணியாற்றும் உயர்ந்த அலுவலாளர் என்றும் பழந்தமிழ் நூல்கள் பகரும். நாஞ்சில் நாட்டை வள்ளுவன் என்ற மன்னன் ஒருவன் ஆண்டான். அவன் நாஞ்சில் வள்ளுவன் எனப்படுவான். அம் மன்னன் மரபில் வந்தவர் எல்லோரும் வள்ளுவர் எனப்படுவார். அம்மரபில் பிறந்த பெரும்புலவரே திருவள்ளுவரும் என்பர் ஒரு சாரார். இனி, வள்ளுவர் என்பார் அரசரின் உட்படு கருமத் தலைவராய்ப் பணியாற்றியவர் என்பர் பிறிதொரு சாரார். எங்ஙனமாயினும் வள்ளுவர் என்னும் பழந்தமிழ்க் குடியினர் அரசியல் தொடர்புடையவர் என்பது உறுதியாகின்றது.

### அரசியல் நூலின் அமைதி

அரசியல் தொடர்புடைய பழங்குடியாகிய வள்ளுவக் குடியில் தோன்றிய திருவள்ளுவர் சிறந்த அரசியல் ஞானியாகத் திகழ்ந்தார் என்று கொள்வதில் தவறொன்றும் இல்லை. அவர் அருளிய திருக்குறள் ஓர் அரிய அரசியல் நூல் என்று கொள்வதும் பொருந்துவதொன்றே. ஆகவே அரசியல் ஞானியாகிய திருவள்ளுவர் தம் நூலின் நடுவே பொருட்பால் என்ற பகுதியைப் புகுத்தியுள்ளார்.

> 'வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
> நடுவண(து) எய்த இருதலையும் எய்தும்'

என்றார் ஒரு பழந்தமிழ்ப் புலவர். அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள்ளே பொருளே அறமும் இன்பமும் அடைதற்குப் பெருந்துணை செய்வது.

பொருள் இல்லாதவர்க்குப் புவியில் வாழ்வே இல்லை. அத்தகைய பொருளைப் படைத்தற்கும் வளர்த்தற்கும் காத்தற்கும் அரசு இன்றியமையாதது. அவ்வரசின் இலக்கணத்தைப் பொருட்பாலின் முதற்கண் போற்றி யுரைத்தார் பொய்யில் புலவர். அரசினை நடத்தும் அருந்திறல் வேந்தர்க்குப் பெருந்துணையாய் விளங்கு வோர் அமைச்சராவர். அவரது இலக்கணத்தை அரசியலை அடுத்து வகுத்துரைத்தார் வள்ளுவர்.

அரசியல் வண்டியில் பூட்டிய எருதுகள்

அரசியலாகிய வண்டியை இழுத்துச் செல்ல அரசன் ஒருவனால் இயலாது. வண்டியை இழுத்துச் செல்லும் இரு காளைகளைப்போல அரசனும் அமைச் சனும் சேர்ந்து அரசியல் வண்டியை இழுக்கவேண்டும். இருவரும் திறம்பட இழுத்தால்தான் அவ்வரசியல் வண்டி செங்கோன்மையாகிய நன்னெறியில் சென்று நாட்டு மக்களுக்குப் பன்னலங்களையும் விளைக்கும். இக்கருத்தைச் சூளாமணி நூலாசிரியர் தெளிவாகச் சொல்லியுள்ளார்:

*'வீங்குநீர் உலகம் காக்கும்*
*விழுநுகம் ஒருவ னாலே*
*தாங்கலாம் தன்மைத் தன்று*
*தலையவிழ் தயங்கு தார்ச்சீர்ப்*
*பாங்கலார் பணியச் சூழும்*
*நூல்வலார் பாக மாகப்*
*பூங்குலாம் அலங்கல் மாலைப்*
*புரவலன் பொறுக்கும் அன்றே.'*

வள்ளுவர் அமைச்சியல்

இவ்வாறு அரசியல் நடாத்துவதில் அரசனுக்கு ஒப்பாக மதிக்கத் தக்க அமைச்சனது இயல்பைத்

திருவள்ளுவர் பத்து அதிகாரத்தால் பரக்க விரித்துரைக்கின்றார். அவர் அமைச்சியலில் வகுத்துள்ள அமைச்சு சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினை செயல்வகை, தூது, மன்னரைச் சேர்ந்தொழுகல், குறிப்பறிதல், அவையறிதல், அவையஞ்சாமை என்னும் பகுதிகளில் அமைச்சர்க்கு அமைய வேண்டிய பண்புகள் அனைத்தையும் விளக்குகின்றார்.

அமைச்சன் அரசியற் செயலை ஆற்றுங்கால் அதனைச் செய்தற்கேற்ற கருவிகளும் காலமும் செய்யும் முறையும் செயலும் ஆகியவற்றை எண்ணித் துணியும் திண்ணிய அறிவாளனாகத் திகழவேண்டும். உள்ளத்துறுதியும், குடிகளைக் காக்கும் கொற்றமும், அறநூல்களைக் கற்றுச் செய்வன செய்து, தவிர்வன தவிரும் பெற்றியும், முயற்சியும் ஆகிய பண்புகளை அவன் பெற்றிருக்கவேண்டும். பகைவர்க்குத் துணையாய் இருப்பாரைப் பிரிக்க வேண்டின் பிரித்தலும், தமக்கு வேண்டியவர்கள் பிரிந்து போகாதவாறு பேணிக் கொள்ளுதலும், முன்னொரு காரணத்தால் பிரிந்தவர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டின் சேர்த்துக் கொள்ளுதலும் ஆகிய செயல்களில் வல்லவனாக அமைச்சன் இருத்தல் வேண்டும். செயல்களை ஆராய்தல், ஆராய்ந்தபின் செய்தல், அதில் உறுதியாக நின்று உழைத்தல் இவற்றில் வல்லவனாகவும் அமைச்சன் இருத்தல் வேண்டும். நீதிநூல்களை ஓதி உணர்ந்து அடக்கமாகப் பேசும் அரிய பண்பை அவன் பெற்றிருக்கவேண்டும். இயற்கையான நுண்ணறிவும் செயற்கையான நூலறிவும் சிறப்பாக அவன்பால் அமையவேண்டும். நூலறிவால் செயலாற்றும் திறங்களைத் தெளிவுற அறிந்திருந்தானாயினும் உலக

இயற்கையை அறிந்தாற்றும் இயல்புடையனுக இருக்க வேண்டும். அரசன் தான் கூறும் அறிவுரையை இகழ்ந்து புறக்கணித்தாலும் அவனுக்கு உறுதி பயக்கும் உண்மைகளை எடுத்துரைக்கவும் இடித்துரைக்கவும் தயங்காதவனுக இருக்கவேண்டும். இவ் இயல்புகள் எல்லாம் ஒருங்கு அமையப் பெற்ற பெருங்கலைச் செல்வனே அரசினைப் பேணும் அருந்திறல் அமைச்சனுவான்.

அமைச்சனது சொல்வன்மை

மேலே கூறிய திறமெல்லாம் பெற்ற திருவுடை அமைச்சனுயினும் அவனுக்குச் சொல்வன்மை இன்றேல் அஃதொரு பெருங்குறையாகும். ஆதலின் அமைச்சனுக்கு நயம்பட உரைக்கும் நாவன்மை வேண்டும். வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன் தருதல் போன்ற அரிய பண்புகளை உடைய சொற்களை அன்புடன் பேசும் ஆற்றல் உடையவனுக அமைச்சன் விளங்கவேண்டும். இவ்வாறு அமைச்சனுக்கு அமைய வேண்டிய சொல் வன்மையை அரியதொரு குறட்பாவால் வள்ளுவர் தெள்ளிதின் விளக்கியுள்ளார்.

*‘கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்*
*வேட்ப மொழிவதாம் சொல்.’*

என்னும் அவரது வாய்மொழி எத்துணையோ அரிய கருத்துக்களைத் தன்பால் கொண்டு இலகுவதாகும் அமைச்சன் பேசும் சொற்கள், கேட்டவரையும் நேரிற் கேளாமல் பிறர் சொல்லக் கேட்டவரையும் வயப்படுத்தும் வல்லமையுடையனவாக இருத்தல் வேண்டும். நண்பரை அவர்தம் நட்பினின்று விலகாதவாறு பிணிக்

கும் பேராற்றலும் பகைவரும் தம் பகைமை யொழித்து நட்புக் கொள்ளும் நல்லாற்றலும் பெற்றனவாக இருத்தல் வேண்டும். கேள்விச் செல்வமுடையாரும் அஃதில்லாருமாகிய எல்லோரையும் ஈர்த்து வயமாக்கும் இயல்புடையனவாக இருத்தல் வேண்டும். எதிர்த்து வினவினரும் வினவாதிருந்தாரும் ஆகிய அனைவரையும் ஆர்த்துப் பிணிக்கும் ஆற்றல் உடையனவாக அச் சொற்கள் அமையவேண்டும். இவை போன்ற இனிய அரிய பண்புகள் எல்லாம் அமைந்த சொல்வன்மை யுடையானே சிறந்த அமைச்சனுவான் அவன் சொல்லத் தக்க செய்திகளை முன் சொல்வனவும் பின் சொல்வனவும் அறிந்து வகைப்படுத்திக் கோத்துக் கூறுவானுயின் அவன் காலால் இடும் பணியை மக்கள் தலையால் செய்ய விரைந்து நிற்பர்.

> ' விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
> சொல்லுதல் வல்லார்ப் பெறின்.'

என்பது வள்ளுவர் வாய்மொழியாகும்.

### அமைச்சனது வினைத்தூய்மை

நாவன்மையுடைய நல்லமைச்சன் சொல்லான் மட்டுமன்றிச் செயலானும் தூயவனுகச் சிறக்க வேண்டும். இதனை வள்ளுவர் வினைத்தூய்மை என்ற பகுதியால் விளக்குகின்றுர். அரசனுக்கு இம்மையில் புகழும் மறுமையில் புண்ணியமும் பயவாத செயல்களை அமைச்சன் அறவே விட்டொழிதல்வேண்டும். தன்னை ஈன்ற அன்னை வறுமையால் பசியுற்று வாடுதலைக் கண்டிரங்கும் நிலை வந்தாலும் அதற்காகச் சான்றேர் பழிக்கும் இழிசெயலை அமைச்சன் இயற்றல் கூடாது. அமைச்சன் அரசியல் வருவாயைப் பெருக்குதற்காகக்

குடிகளை வருத்திப் பொருள் குவிப்பானாயின் அது விரைந்து அழிந்துபோம். 'அழக்கொண்ட எல்லாம் அழப்போம்' என்பார் வள்ளுவர். அமைச்சன் தீய வழிகளில் பொருளை ஈட்டி அரசனுக்குச் சேர்த்து வைத்தால் அது பச்சை மட்பாண்டத்தில் நீரை ஊற்றிக் காத்த செயலோடு ஒப்பாகும் என்றார் அவ் ஒப்பில் புலவர்.

> *'சலத்தால் பொருள்செய்(து) ஏமார்த்தல் பசுமண்*
> *கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று.'*

என்பது அவர் வாய்மொழியாகும்.

அரசனது வினைத்திட்பம்

அரசியலில் தூயவினையைத் தொடங்கிச் செய்யப் புகும் அமைச்சனுக்கு மனவுறுதிவேண்டும். வினைத் திட்பம் என்பது மனத்திட்பமே என்பார் வள்ளுவர். துணிவுடன் செய்யும் வினையை முடிவில் பிறர் அறியுமாறு முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே மனத் திட்பமாகும். அவ்வாறின்றி அச்செயல் இடையே வெளிப்படுமாயின் அது நீங்காத துன்பத்தைத் தரும். மனத்திட்பமுடைய மதியமைச்சனே, தான் அடைய எண்ணிய பொருள்கள் எல்லாவற்றையும் எண்ணியவாறே பெற இயலும்.

அமைச்சன் எண்ணித் துணிந்த செயலைக் காலத் தாழ்வின்றி விரைந்தாற்றவேண்டும். நீட்டித்துச் செய்யத் தக்க வினைகளை நீட்டிக்கலாம். நீட்டியாது செய்யும் வினைகளை விரைந்து முடிக்கவேண்டும். அமைச்சன் தான் செய்கின்ற வினையால் அதைப் போன்ற பிறிதொரு வினையையும் முடித்துக் கொள்ள வேண்டும்.

அமைச்சன் தூதுப்பணி

இத்தகைய திறமெல்லாம் படைத்த அமைச்சன் மற்ருெரு மன்னன்பால் தூது செல்லும் வாய்ப்பும் ஏற்படும். அங்ஙனம் செல்லுங்கால் தன் நாட்டு மன்னனுக்கு இழிவும் கேடும் ஏற்படாதவாறு வகுத்துக் கூறும் தலையாய தூதனுக விளங்கவேண்டும். வேற் றரசரிடம் தான் அவரைக் காணும்முறையும் பேசும் முறையும் முன்பே ஆராய்ந்து கொள்ளவேண்டும். தன் சொல்லை அவர் ஏற்றுக்கொள்ளும் செவ்வி யறிந்து சொல்லவேண்டும். தான் சென்ற கருமத்தைச் சொல்லு தற்கு ஏற்ற இடமறிந்து இயம்பவேண்டும். அவ்வாறு சொல்ல வல்லவனே தூதரில் தலைமையானவன் என்பார் வள்ளுவர்.

> *'கடனறிந்து காலம் கருதி இடனறிந்(து)*
> *எண்ணி யுரைப்பான் தலை.'*

என்பது அவர் வாய்மொழி.

மன்னரைச் சார்ந்தொழுகும் திறம்

மன்னர்க்கு உறுதி உரைக்கும் அமைச்சன் அவரைச் சேர்ந்தொழுகும் திறத்தையும் ஆய்ந்து அறிந்து பழகவேண்டும். நெருப்பை வளர்த்துக் குளிர்காய்பவரைப் போல அரசியல் பொறுப்புடைய அமைச்சன், அரசனை அகலாதும் அணுகாதும் தகவுறப் பழகவேண்டும். தன்னைப் பேணும் மன்னன் விழையும் பொருள்களை அமைச்சன் விழையாதொழி தலே பெருமையை விளைப்பதாகும். மன்னன் தன்னைச் சிறிதும் ஐயுருதவாறு அமைச்சன் நடந்து கொள் ளுதலே நலம் பயப்பதாகும். மன்னன் அருகிருக்கும் போது அவன் காணப் பிறர் செவிக்கண் மறை பேசு

தலும் ஒருவன் முகம் நோக்கி நகுதலும் அமைச்சனுக்கு ஆகாதனவாகும். மன்னன் பிறருடன் மறை பேசுங் கால் மதியமைச்சன் அதனை உற்றுக்கேட்டலோ பற்றி வினவலோ தகாது. அவன் குறிப்பறிந்து, காலம் தெரிந்து, வெறுப்பில்லாதனவும் வேண்டுவனவுமாகிய காரியங்களை விரும்புமாறு அமைச்சன் விளம்ப வேண்டும். அமைச்சன், மன்னனைத் தன்னினும் இளையவன் என்றோ, தனக்கு உறவினன் என்றோ இழிவாக எண்ணிவிடுதல் கூடாது.

குறிப்பறியும் சிறப்பாற்றல்

இவ்வாறு அரசனைச் சார்ந்து பழகும் அமைச்சனுக்குக் குறிப்பறியும் ஆற்றல் வேண்டும். அரசன் குறித்த கருமத்தை அவன் கூறுமலே அவன் முகத்தாலும் கண்ணாலும் நோக்கி அறியும் திறத்தை அமைச்சன் பெற்றிருக்கவேண்டும். அரசன்குறிப்பறிந்து செயலாற்றும் சீரிய அமைச்சன், தான் இருக்கும் அவையின் இயல்பையும் தெரிந்து காரியங்களைக் கூறவேண்டும். பொருள்களைத் தாமே உணரவல்ல அறிவுடையார் நிறைந்த அவைக்கண் அமைச்சன் அரசியற் செய்திகளை ஆராய்ந்து கூறவேண்டும். அங்ஙனம் கூறுதல் பசும்பயிர் வளர்ந்த பாத்தியுள் நீரைச் சொரிந்த பான்மைக்கு ஒப்பாகும் என்பார் வள்ளுவர். புல்லறிவாளர் கூடிய அவையில் அமைச்சன் நல்லறிவாளர்போற்றும் செய்திகளைச் சொன்னல் அங்கணத்துள் சிந்திய அமிழ்தம் போலாகும்.

அவையஞ்சா ஆற்றல்

அவையறிந்து பேசும் அமைச்சனுக்கு அவைக்கு அஞ்சாத வல்லமையும் வாய்த்திருக்கவேண்டும்.

பகைவர் நிறைந்த போர்க்களத்தில் அஞ்சாது புக்குச் சாவார் உலகில் பலர். ஆனால் அவைக்கண் அஞ்சாது புக்குச் சொல்வார் மிகவும் அரியர். அத்தகைய அரிய திறமையை அமைச்சன் பெற்றிருக்கவேண்டும். இவ்வாறு அமைச்சர் இயல்புகளை நூறு பாக்களில் நுண்ணிதாக எண்ணி உரைத்த வள்ளுவரின் தெள்ளிய அறிவுத்திறனை என்னென்று போற்றுவது!

---

# ௩. கம்பன் கண்ட அமைச்சர்

## கம்பனும் கவிதையும்

தமிழ் இலக்கிய வானில் தனியொளி பெற்றுத் திகழ்பவன் கம்பன். அவனது அருந்தமிழ்ப் படைப்பாகிய இராமாயணம் ஒன்பான் சுவையும் ஒருங்கு மலிந்த உயர்ந்த கவியமுதமாகும். அதனாலேயே 'கம்ப நாடன் கவிதையிற் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே' என்று கவிஞர் போற்றுவாராயினர்.

## தயரதன் அமைச்சர்கள்

இத்தகைய இராம காவியத்தில் பேசப்பெறும் கோசல நாட்டுக் கொற்றவன் தயரதன் என்பான். அவனது அரசவையில் வீற்றிருந்த அமைச்சர்கள் அறுபதினாயிரம் பேர்கள் ஆவர். அவர்கட்குத் தலைமை தாங்கிய முதலமைச்சன் சுமந்திரன் என்பான். இவ் அமைச்சர்களின் இயல்பைக் கம்பர் தமது காவியத்தில் விரித்துரைக்கின்றார்.

## அறிவும் திறமும்

தயரதனுக்கு வாய்த்த அமைச்சர்கள் வழிவழியாக அமைச்சுரிமை தாங்கி வரும் பழங்குடியில் தோன்றிய பண்பினர். கலைகள் பல ஆய்ந்துணர்ந்த கல்வியறிவும், கலை வல்லார் பலர் சொல்லக் கேட்ட கேள்வியறிவும், அவற்றின் பயனும் பெற்ற பேரறிவாளர். தங்கள் நலமும் செல்வமும் நலிந்தாலும் நடுவுநிலை பிறழாத பெற்றியர். தீவினை ஒழித்து நல்வினையே ஆற்றும் திருவுடையார்.

மதியும் மானமும்

'மந்திரிக்கு அழகு வரும்பொருள் உரைத்தல்' என்பர் ஆன்றோர். தயரதன் அமைச்சர்கள் நிகழ்ந்த தொரு செயலைக் கொண்டு மேல் நிகழப்போகும் செயலை அறியும் திறமுடையார். அரசனுக்கு ஊழ்வினையால் தீங்கு விளைந்ததாயினும் அதனையும் மாற்றி யொழிக்கும் ஆற்றலுடையார். அவர்கள் பிறப்பிலேயே சிறப்புற்ற பெரியவர்கள். அரசியலைப் பற்றிய அரிய நூல்களையெல்லாம் ஓதியுணர்ந்தவர்கள். மானத்தை உயிரினும் மாண்புடையதாகப் போற்றிக் காப்பவர்கள். உடம்பில் உள்ள உரோமத்தில் ஒன்றை இழப்பினும் உயிர் நீக்கும் கவரிமாவைப் போல் தம் பெருமைக்கு ஒரு சிறிது இழுக்கு நேர்ந்தாலும் அதனை உயிர் கொடுத்தேனும் காப்பார்கள்.

அறமும் அறிவும்

அவர்கள் அரசியல் வினைகளை ஆற்றுதற்குரிய காலத்தையும் இடத்தையும் அவற்றிற்கு வேண்டும் கருவிகளையும் தம் நூலறிவும் நுண்ணறிவும் கொண்டு நுனித்து நோக்குவர். தெய்வத்தை வழிபட்டு மெய் வைத்த அறவினைகளையே ஆற்றுவர். ஒழுக்கத்தில் தவறாத உத்தமராக ஒளிர்வர். தமக்கும் அரசனுக்கும் புகழைத் தரும் புனிதமான வினைகளையே புரிவர். அரசனுக்கும் நாட்டிற்கும் நலம் பயக்கும் செயல்களையெல்லாம் நன்காய்ந்து செய்வர்.

உறுதியும் உரமும்

அரசனுக்கு உறுதி பயக்கும் உண்மைகளை எடுத்துரைப்பதிலும் இடித்துரைப்பதிலும் அஞ்சாதவர் தய

ரதன் அமைச்சர்கள். அரசன் வெகுண்டாலும் அவ் வெம்மையைத் தாங்கிக்கொண்டு நீதியை விடாது நின்று உரைப்பார்கள். அரசனால் தம் உயிர்க்கு இறுதி நேர்ந்தாலும் உறுதியை உரைப்பதில் உள்ளம் தளர மாட்டார்கள். செங்கோன்மையில் சிறிதும் பிறழாத தெளிவுடையார்கள். முக்காலமும் உணர வல்ல மூதறி வாளர்கள். அனைவரும் ஒரே கருத்தை ஒற்றுமையாக உரைப்பார்கள்.

*'தம்முயிர்க்(கு) இறுதி எண்ணார்*
*தலைமகன் வெகுண்ட போதும்*
*வெம்மையைத் தாங்கி நீதி*
*விடாதுநின்(று) உரைக்கும் வீரர்*
*செம்மையின் திறம்பல் செல்லாத்*
*தேற்றத்தார் தெரியும் காலம்*
*மும்மையும் உணர வல்லார்*
*ஒருமையே மொழியும் நீரார்.'*

இப்பாடல் அமைச்சர்க்கு அமைய வேண்டிய அரிய பண்புகளையெல்லாம் அழகுற விளக்கும் அமுதனைய பாடலாகும்.

### மதியமைச்சரும் மருத்துவரும்

தயரதன் அமைச்சர்கள் மருத்துவரைப் போன்ற மாண்புடையவர்கள். மருத்துவர் நோயாளனது நோயைப் போக்க எத்தகைய சிகிச்சையையும் மேற் கொள்வர். உடலில் ஏற்பட்ட சிறு புண்ணால் அவ்வுட லுக்கே பெருங்கேடு விளைவதாயிருப்பின் அப் புண்ணைக் கத்தி கொண்டு அறுத்தும், காரம் வைத்துச் சுட்டும் அறுவை மருத்துவம் செய்வர். அங்ஙனம் பெருத்த வேதனையை விளைக்கும் மருத்துவத்தை அன்னவர் செய்யினும் அவர்கள் நோக்கமெல்லாம் நோயாளனது

நோயைப் போக்கும் நலம் பற்றியதே. ஆதலின் நோயாளன் மருத்துவரை வெறுத்துப் பழித்து இகழ்வ தில்லை. அங்ஙனம் சிகிச்சை செய்து குணப்படுத்திய மருத்துவரைப் பெரிதும் மதித்துத் தெய்வமெனக் கொண்டாடுவான்.

> 'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
> மாளாத காதல் நோயாளன்.'

என்று பாடினர் ஆழ்வார் ஒருவர். அத்தகைய மருத்துவரைப் போன்று அரசனுக்கு நல்லவும் தீயவும் நாடிச் சொல்லும் நன்னோக்கினர் தயரதன் அமைச்சர் கள். அவர்கள் நாட்டிற்கோ அரசனுக்கோ திடீரென்று எதிர்பாராது எது நேர்ந்தாலும் இது முன்னை நல்வினை யென எண்ணி முந்தி வந்துதவும் சிந்தையாளர்கள். அவர்கள் அறுபதினாயிரம் பேர்களாக இருந்தாலும் அரசனுக்கு உறுதியுரைப்பதில் ஒருவரைப் போன்று ஒற்றுமை உணர்ச்சியுடன் ஒளிர்வர். ஆதலின் தயரதன் பெற்ற அறிவுருவங்கள் அவ் அமைச்சர்கள் என்றே எண்ண வேண்டும்.

### தயரதன் மந்திரப் பேரவை

இத்தகைய அமைச்சர்கள் அறுபதினாயிரம் பேர் களும் மந்திரப் பேரவை கூடும் வேளையில் மறிதிரைக் கடல் போல் வந்து மன்னனைச் சூழ்ந்து அமர்ந்திருப் பர். தயரதன் தன் அரசவையில் நோக்கும் திசையெல் லாம் நுண்ணறிவுடைய அமைச்சரையே கண்டு களிப் பான்.

### அரசன் கருத்தை அறிவித்தல்

ஒருநாள் தயரதன் தனது மந்திரப் பேரவையினைக் கூட்டினன். அங்கு வந்தமர்ந்த அமைச்சர்களிடம்

தன் சிந்தையில் எழுந்த கருத்தைச் செப்பினன். "கன்னியர் கற்பும் பன்னரும் அறமும் பெருந்துணை செய்யப் பாருலகைப் பல்லாயிரம் ஆண்டுகளாகக் காவல் புரிந்தேன். இதுகாறும் மன்னுயிர்க்கு உறுவதே செய்து வாழ்ந்த யான் என் உயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன். இராமனாகிய சிறந்த பெருமகனைப் பெற்றேன். அவன் சீதையாகிய திருமகளைக் கொள்ளும் மணவினை கண்டு மகிழ்ந்தேன். நிறை குணத் தோன்றலாகிய அவ் இராமனுக்கு நிலமகளையும் மணஞ்செய்து காண விரும்பினேன். ஆதலால் இராமனுக்கு அரசினைக் கொடுத்து, யான் பிறவியை அறுக்கும் பெருந்தவம் புரிதற்கு வனம் புக நினைந்தேன். நும்முடைய கருத்து யாது?" என்று அன்புடன் வினவினன்.

அமைச்சர் இசைவு

தயரதன் கருத்தைக் கேட்ட அமைச்சர்களுக்கு ஒருபால் மகிழ்ச்சியும் மற்றொருபால் துயரமும் ஏற்பட்டன. இராமனை அரசனாக்கும் செய்தி இன்பமூட்டியதாயினும் தயரதன் வனம் புகுதற்கு விரும்பும் செய்தி துன்பமூட்டியது. அதனால் அவர்கள் இரண்டு கன்றுகளுக்கு இரங்கும் ஒரு பசுவைப்போல் வாளா இருந்தனர். பின்னர்ச் சிறிது ஆராய்ந்து, தயரதன் செய்யத்தக்கது அதனையன்றிப் பிறிதில்லை என்ற முடிவால் இசைந்தனர். அப்பொழுது முதலமைச்சனாகிய சுமந்திரன் எழுந்து அரசனைத் தொழுது, கருத்தைச் சொல்லத் தொடங்கினன். அவையில் இருந்த அமைச்சர்கள் அனைவருடைய முகத்தாலும் அவர்கள் அகக்கருத்தைத் தெரிந்தவனாய்ச் சுமந்திரன் பேசினன்:

சுமந்திரன் மறுமொழி

'அரசே! இராமன் அரசினை ஏற்பான் என்ற செய்தியைத் தெரிந்து இன்புறும் எங்கள் சிந்தையை, அரசினைத் துறந்து நீ வனம்புகுவாய் என்னும் செய்தி சுட்டெரிக்கின்றது. நின் குல முன்னோர் மறவாது புரிந்த அறத்தை நீ மறப்பதும் முறையன்று. அவ் அறத்தையும் கொடியது என்று கூறினால் செயத்தகும் அறந்தான் யாது? ஆதலின் நின் முதல் மகனாகிய இராமனுக்கு முடிசூட்டிப் பின் நீ விரும்பிய செயலைப் புரிவாய்,' என்று சுமந்திரன் மறுமொழி பகர்ந்தான். இங்ஙனம் உறுதி பயக்கும் உண்மைகளை அஞ்சாது உரைக்கும் உயர்ந்த அமைச்சர்களைத் தயரதன் பெற்றிருந்தான் என்று கம்பன் தனது காவியத்தில் பேசுகிறான்.

## ௬. மனுவேந்தன் மதியமைச்சர்

### சிவபிரானும் செந்தமிழ்ப் புராணங்களும்

தமிழில் எண்ணற்ற புராணங்கள் எழுந்துள்ளன. அவற்றுள் தலைசிறந்த புராணங்கள் மூன்று. அவை பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புரணம் என்ற மூன்றுமாகும். செம்மேனி யெம்மானாகிய சிவனுக்கு இம்மூன்று புராணங்களும் மூன்று கண்கள் என்று ஆன்றோர் போற்றுவர். அவற்றுள் பெரிய புராணம் சிவனது வலக்கண் ஆகும். திருவிளையாடற் புராணம் அப் பெருமானது இடக்கண் ஆகும். கந்த புராணம் அக் கடவுளின் நுதற்கண் ஆகும்.

### பெரியபுராணத்தின் பெருமை

சிவபெருமானின் கண்களெனப் பாராட்டும் செந்தமிழ்ப் புராணங்கள் மூன்றனுள்ளும் முதன்மை வாய்ந்தது பெரிய புராணமே. இஃது அறுபத்து மூன்று சிவனடியார்களின் அரிய வரலாறுகளை விளக்கும் பெரிய நூலாயினும் சிறந்த காவிய அமைப்பைக் கொண்டது. காவியத்திற்கு வேண்டிய நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு, ஆற்றுச் சிறப்பு, காவியத் தலைவர்களின் தொடர்ச்சியான வரலாற்றுச் சிறப்பு முதலிய பல இலக்கணங்களும் இனிதின் அமைந்த அரிய நூலாகும். வீட்டு நெறிகாட்டும் வியத்தகு காவியம் இப் பெரிய புராணமாகும். சேக்கிழார் அருளிய இந்நூல் தெய்வ மணக்கும் செய்யுட்களால் ஆகிய தனிச் சிறப்புடையது.

### திருவாரூர்ச் சிறப்பு

இக் காவியத்தில் பேசப்பெறும் நாடு பெருவளம் படைத்த சோழநாடாகும். அந்நாட்டின் தலைநகராகப்

போற்றப் பெறுவது திருவாரூர் என்னும் தெய்வத் தலம். அது நிலமகளின் திருநுதல் அணிந்த திலகம் போல்வது; மலர்மகள் தங்கும் தாமரை மலரைப் போல்வது. அத்தகைய திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டை அரசாண்ட மன்னன் மனுவேந்தன் என்பான். அவன் சோழர் குலத்தில் உதித்த முன்னோன் ஆவான்.

> 'மன்னு சீர்அந பாயன் வழிமுதல்
> மின்னும் மாமணிப் பூண்மனு வேந்தனே.'

என்று அவ்வேந்தனைக் குறித்தார் சேக்கிழார்.

கன்றை இழந்த பசு

மண்ணில் வாழும் மன்னுயிர்க் கெல்லாம் கண்ணும் ஆவியும்போல் விளங்கிய மனுவேந்தன் தனது நீதியான ஆட்சியின் மாட்சியால் பண்டை மனுவின் பெயரைத் தனதாக்கிக் கொண்டான். இவனுக்கு வீதி விடங்கன் என்னும் மைந்தன் ஒருவன் இருந்தான். அவன் ஒருநாள் தேரேறி மன்னர் குமரர் தன்னைச் சூழ்ந்துவர அரச வீதியின் வழியே சென்று கொண்டிருந்தான். அப்போது பயமறியாத இளங் கன்று ஒன்று எவரும் அறியாவண்ணம் துள்ளி ஓடி வந்து தேர்ச் சக்கரத்தில் வீழ்ந்து மாய்ந்தது. கன்று இறந்ததைக் கண்ட தாய்ப்பசு அவ்விடத்திற்கு ஓடோடி வந்து அலறிச் சோர்ந்து நிலத்தில் வீழ்ந்து புரண்டது.

இந் நிகழ்ச்சியைக் கண்ட மன்னன் மகன் இளங் கன்றுக்குப் பெருந்தீங்கு நேர்ந்ததே என்று நெஞ்சம் பதைத்தான். தேரிலிருந்து கீழே குதித்தான். கன்றும் பசுவும் இன்று என் அறிவைக் கொன்றனவே என்று உள்ளம் குலைந்தான். மாநிலம் காக்கும் மனுவேந்

தனுக்குப் பெரும்பழி வருமாறு பிறந்தேனே என்று வருந்தி நைந்தான். இதற்குள் கன்றை இழந்த தாய்ப் பசு கண்ணீர் சொரியக் கதறிக் கொண்டு மன்னன் மாளிகை வாயிலை நண்ணியது. ஆங்குத் தூங்கிய மணி யினைக் கொம்பால் அசைத்து ஒலியெழச் செய்தது.

மணியோசை கேட்ட மன்னன்

பசுவின் கொம்பால் அசைக்கப் பெற்று ஒலித்த மணியின் ஓசை மனுவேந்தன் பழிப்பறை முழக்கைப் போன்றும், பாவத்தின் ஒலியைப் போன்றும், குல மைந்தன் ஆவியைக் கொள்ள வரும் கூற்றுவன் ஏறி வந்த வாகனத்தின் கழுத்தணி மணியின் ஒலியைப் போன்றும் பெருமுழக்குடன் ஒலித்தது என்று குறித் தார் சேக்கிழார்.

> ' பழிப்பறை முழக்கோ ஆர்க்கும்
> பாவத்தின் ஒலியோ வேந்தன்
> வழித்திரு மைந்தன் ஆவி
> கொளவரும் மறலி ஊர்திக்
> கழுத்தணி மணியின் ஆர்ப்போ
> என்னத்தன் கடைமுன் கேளாத்
> தெழித்தெழும் ஓசை மன்னன்
> செவிப்புலம் புக்க போது.'

இவ்வாறு மணியோசை மனுவேந்தன் செவியிற் கேட்டதும் அவன் துணுக்குற்று அரண்மனை வாயிலை அடைந்தான். ஆங்கு நின்ற காவலர், "இதோ நிற்கும் பசுவே தன் கொம்பால் மணியை அசைத்தது," என்று பணிந்து மொழிந்தனர். மன்னன் அப்பசு விற்கு நேர்ந்த இன்னல் யாதெனக் கேட்பான் போலப் பக்கத்தில் நின்ற அமைச்சரைச் சற்றே நோக்கினான். அங்கு நின்ற அமைச்சன் முதிர்ந்த கேள்வியும் முது

நூல் உணர்வும் பெற்றவன். அவன் முன்னுற நிகழ்ந்த செய்தியெல்லாம் அறிந்தவன். ஆதலின் நிகழ்ந்ததை அரசன் உள்ளம் கொள்ளுமாறு வகைப் படுத்தி உரைத்தான்.

> "வளவ! நின் புதல்வன் ஆங்கோர்
> மணிநெடுந் தேர்மேல் ஏறி
> அளவில்தேர்த் தானை சூழ
> அரசுலாம் தெருவில் போங்கால்
> இளைய ஆன் கன்று தேர்க்கால்
> இடைப் புகுந்(து) இறந்த தாகத்
> தளர்வுறும் இத்தாய் வந்து
> விளைத்த(து)இத் தன்மை" என்றான்.

அமைச்சன் சொல்வன்மை

'அரசே! நும் புதல்வன் தேரேறிப் படைகள் புடை சூழ அரச வீதியில் சென்று கொண்டிருந்தான். பயமறியாத இளங்கன்று எவரும் அறியாமல் ஓடி வந்து தேர்ச் சக்கரத்தில் விழுந்து இறந்தது. அதனல் துயருறும் தாய்ப்பசு இச்செயலைப் புரிந்தது' என்று அவ் அமைச்சன் தெரிந்துரைத்தான். இங்ஙனம் கூறிய தனது மொழியால் அரசகுமரன் மீது யாதொரு குற்றமும் இல்லையென்பதை நன்கு வலியுறுத்தும் அமைச்சனது மதிநுட்பம் எண்ணி மகிழ்தற் குரியதாகும்.

அமைச்சன் 'நின் புதல்வன்' என்று கூறி மிகுந்த மகவாசையை ஊட்டினன். 'புதல்வன்' என்ற ஒருமைச் சொல்லால் குலத்திற்கே தனிமைந்தனக இருக்கிறான் என்ற உணர்ச்சியை உண்டுபண்ணினன். அவன் நெடுந்தேர் ஏறிச் சென்றனதலின் கீழே நிகழ்ந்த செயலை அவன் அறியான்; கன்று சக்கரத்தில்

விழுந்து இறந்ததற்கு அவன் குற்றவாளியல்லன்; மேலும் படைகள் புடைசூழச் செல்லும் அவன் நெடுந் தேரில் இருந்தவாறு துள்ளிவரும் கன்றைக் கண் டிருக்க முடியாது; அவன் செல்லும் வீதியோ மாடு மேயும் வீதியன்று; மன்னன் உலா வரும் மாட வீதி அது; அவ்வீதிக்குள் கன்று புகுந்ததும் அதனை உரியவர் அவிழ்த்து விட்டதும் பெருங்குற்றம்; பயமறி யாத இளங்கன்றைப் பற்றிக் கட்டி வைத்திருத்தலே உரியவர் கடமை; அதனை உணராது அரச வீதியில் புகுமாறு அவிழ்த்துவிட்ட செயல் கன்றுக்கு உரிய வரின் பெரிய குற்றமாகும்; ஆதலின் இக்குற்றத்திற்கு அரசகுமாரன் அணுவளவும் பாத்திரமாகான் என்னும் உண்மையை மன்னன் தெரியவேண்டும் என்பதற்காக அவ் அமைச்சன் திறம்பட உரைத்தான்.

மனுவேந்தன் துயரம்

அமைச்சன் கூறிய மொழியைக் கேட்டு மனு வேந்தன் பசு அடைந்த துயரத்தைப் போன்று தானும் துயருற்றான். வெவ்விடம் தலைக்கேறியது போல் உள்ளத்தில் வேதனைப்பட்டான். என்னுடைய ஆட்சி மிக நன்றாக இருக்கிறது! என்று சொல்லி மனம் சுழன் றான். இப்பசுவின் துயரைப் போக்க யாது செய்வது? என்று எண்ணியெண்ணி ஏங்கினான். அந் நிலையில் அரசன் அடைந்த துயரத்திற்கு ஓர் அளவே இல்லை.

அமைச்சர் உரையும் அரசன் முறையும்

மன்னன் படும் இன்னலைக் கண்ட மந்திரிகள் அவன் மலரடி வணங்கி, "அரசே! தாம் மனம் தளர்ந்து வாடுவது இதற்குத் தீர்வாகாது. பசுவைக்

கொன்ற பாவத்திற்குக் கழுவாயாக வேதியர் விதித்த முறையில் நம் அரசகுமாரனைச் செலுத்தலே அற மாகும்' என்று எடுத்துரைத்தனர். அதுகேட்ட மன்னன், "வேதியர் ஓதும் விதிப்படிக் கழுவாய் செய்துவிட்டால் இளங்கன்றை இழந்தலறும் தாய்ப் பசுவின் நோய்க்குத் தக்க மருந்தாகிவிடுமோ? நான் மகனை இழப்பேன் என்ற எண்ணத்தால் நீவிர் கூறிய வாறு குற்றம் புரிய இசைவேனாயின் தருமம் சலித்து விடாதோ? மாநிலம் காக்கும் மன்னன் மன்னுயிர்க்கு வரும் ஐவகை இன்னல்களையும் போக்கி அறத் தைக் காக்க வேண்டாவோ? என் மகன் இழைத்த தீங்கிற்குக் கழுவாய் செய்ய இசைந்து, பிறனொருவன் ஓர் உயிரைக் கொன்றதற்குத் தண்டனையாக அவனைக் கொல்வேனாயின் தொன்மையான மனுநூல் வகுத்த விதிகள் பிற்கால மனுவேந்தன் ஒருவனால் அழிப் புண்டன என்னும் பழிச்சொல்லை யான் பெறுதற்கே அறிவுறுத்தினீர்! அமைச்சர்களே! இது முறை யாகுமோ?" என்று தன் அமைச்சர்களை இகழ்ந் துரைத்தான்.

அமைச்சர் இடித்துரைத்தல்

தங்கள் கருத்தை மறுத்துரைத்த மன்னனாகிய மனுவேந்தனுக்கு மதியமைச்சர்கள் மேலும் இடித் துரைக்கத் தலைப்பட்டார்கள். "அரசே! உலகில் இத் தகைய நிகழ்ச்சி முன்னும் நிகழ்ந்துள்ளது. கன்றின் உயிருக்காக அரசகும்ரன் உயிரை அழித்தல் முறைமை யன்று. வேதம் விதித்தவாறு நடத்தல் தொன்று தொட்டு வரும் நன்னெறியேயாகும்," என்று எடுத் துரைத்தனர். அவர்கள் மொழி கேட்ட அரசன்,

"நீவிர் நீதியுரைத்தீரல்லீர், ! பழுதுரைத்தீர்" என்று கூறி எரியிடைப்பட்ட கமலம்போல் முகம் வாடினான். "நீவிர் அறநெறியின் உண்மையை ஆராயாது கூறுகின்றீர் ; எவ்வுலகில் எப்பசு இத்தகைய இடரால் துயருற்றுக் கதறியது ? அத்துயரை மன்னனிடம் அறிவிக்க மணியை அசைத்து ஒலியெழச் செய்ததும் உண்டோ? கூறுங்கள் ; சிவபிரான் விரும்பியுறையும் திருவாரூரில் பிறந்த உயிரை என் மகன் கொன்றானதலின் அதற்குத் தண்டனையாக அவனைக் கொல்லுவதே அறமாகும் என்பதை உணர்மின்; இப்பசுவின் துயரகற்ற இயலாத யான் அது பெற்றுள்ள பேரிடரை யானும் பெறுவதே தருமமும் கருமமும் ஆகும்," என்று சினத்துடன் பேசினான்.

அமைச்சன் இறப்பும் அரசன் சிறப்பும்

மனுவேந்தன் துணிவைக் கண்ட மதியமைச்சர்கள் பெரிதும் அஞ்சி அகன்றனர். அரசன் அவருள் ஒருவனை அருகழைத்து, "அமைச்ச! முதற்கண் நம் அரசகுமரனைக் கன்று உயிர் நீத்த அதே வீதிக்குக் கொண்டு சென்று அவனை நிலத்திற் கிடத்தி அவன் மேல் தேரைச் செலுத்துக!" எனப் பணித்தான். அவ் அமைச்சனோ அவ்வாறு செய்ய விழையாது, தன் ஆருயிர் போக்கினான். அச்செய்தி உணர்ந்த மனுவேந்தன் தன் மைந்தனைத் தானே அழைத்துக் கொண்டு அரச வீதியை அடைந்தான். குலத்திற்கொரு மகனாக விளங்கிய வீதிவிடங்கனை நிலத்தில் கிடத்தினான். தானே தேரின்மீது ஏறி மைந்தன்மீது தேரைச் செலுத்தினான். அறத்தின் வழிச் செல்வதே அரசன் கடமை என்று கருதினான். குற்றம் புரிந்தவன்

தன் குலமகனாகவும் தனிமகனாகவும் இருந்தாலும் அவனும் தக்க தண்டனையை அடைந்தே தீரவேண்டும் என்ற உறுதியுடன் உயர்ந்த அரசு நெறியை நடத்தினான்.

மனுவேந்தன் ஆட்சி மாண்பு

இவ்வாறு அருஞ்செயல் புரிந்த அரசன் மாட்சியைப் புலவரெல்லாரும் வியந்து போற்றினர். தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் அவனது ஆட்சியை அரிதோ? எளிதோ? என்று வியந்து போற்றி வினவியருளினார்.

*'ஒருமைந்தன் தன்குலத்துக் (கு)*
*உள்ளான்என் பதும்உணரான்*
*தருமம்தன் வழிச்செல்கை*
*கடனென்று தன்மைந்தன்*
*மருமம்தன் தேராழி*
*உறஊர்ந்தான் மனுவேந்தன்*
*அருமந்த அரசாட்சி*
*அரிதோ? மற்(று) எளிதோதான்!'*

என்பது சேக்கிழார் வாக்கு.

சிவஞான முனிவர் பாராட்டு

கொல்லாமை என்னும் நல்லறத்தின் மாண்பைச் சொல்ல வந்த வள்ளுவர் பெருமான், 'பிறிதோர் இனிய உயிரை அதன் உடம்பினின்றும் நீக்கும் தொழிலைச் செய்யாதவிடத்துத், தன்னுயிர் நீங்கிப் போமாயினும் அக்கொடுந் தொழிலைச் செய்யாதொழிக, என்று வலியுறுத்தினார். இவ் உண்மையை விளக்கப் போந்த சிவஞான முனிவர், மன்னன் ஆணைப்படி மைந்தன் உயிரைத் தேர்க்காலில் கிடத்தி மாய்க்க

வேண்டிய மதியமைச்சன் அது செய்ய அஞ்சித் தன்னுயிரையே போக்கிக்கொண்ட வரலாற்றைத் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

'வேந்துமகன் தேர்க்கால் விடலஞ்சி மந்திரிதான்
சோர்ந்துதன(து) ஆவிவிட்டான் சோமோசா—ஆய்ந்
துணர்ந்தோர்
தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி(து)
இன்னுயிர் நீக்கும் வினை.

என்பது முனிவர் அருளிய பாடலாகும்.

இளங்கோ வழங்கும் பாராட்டு

கற்பரசியாகிய கண்ணகியின் வாயிலாகப் புகார் நகரின் சிறப்பைப் புலப்படுத்த எண்ணிய இளங்கோ வடிகள், மைந்தனை முறைசெய்த மனுவேந்தன் ஆண்ட மாட்சியுடைய நகரம் புகார் என்று புகன்றருளினார்.

'வாயில் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப் புகார்.'

என்பது இளங்கோவடிகளின் இனிய வாக்கு.

# ரு. அமைச்சர் அழும்பில் வேள்

## செங்குட்டுவன் அரசியல்

நெஞ்சை அள்ளும் செஞ்சொற் காவியமாகிய சிலப்பதிகாரத்தில் பேசப்படும் மன்னருள்ளே ஒருவன் செங்குட்டுவன். வஞ்சிமாநகரைத் தலைநகராகக் கொண்டு சேர நாட்டை ஆண்ட வீரப் பெருவேந்தனாகிய செங்குட்டுவன் தனது ஆட்சியைத் திறம்பெற நடாத்தினான். அவன் தனது அரசியலை இனிது நடத்த ஐம்பெருங் குழுவையும் எண்பேராயத்தையும் அமைத்திருந்தான்.

அமைச்சர், புரோகிதர், சேனைபதியர், தூதுவர், சாரணர் என்னும் ஐவரும் அரசர்க்குரிய ஐம்பெருங் குழுவினர் ஆவர். கரணத்தியலவர், கரும விதிகள், கனகச் சுற்றம், கடை காப்பாளர், நகரமாந்தர், படைத் தலைவர், யானைவீரர், குதிரைவீரர் என்னும் எண்மரும் எண்பேராயத்தார் எனப்படுவர். செங்குட்டுவனது அரசியலில் இவ் இருபெருங் குழுவினரும் பெருமையுற்று விளங்கினர். இவர்கள் அனைவருக்கும் தலைமை பூண்டு விளங்கினோர் அமைச்சர்களே.

## அழும்பில் நாட்டுத் தலைவர்

செங்குட்டுவனுக்கு வாய்த்த அமைச்சர் பலருள் தலைமை தாங்கிய முதலமைச்சர் அழும்பில் வேள் என்பார். இவர் அழும்பில் என்னும் வளம் படைத்த நாட்டின் தலைவராவார். அழும்பில் என்பது பாண்டி நாட்டில் உள்ளதோர் ஊராகும். அவ்வூரைச் சூழ்ந்த நிலப் பகுதியே அழும்பில் நாடு எனப்படும். அவ்வூரும்

நாடும் இந்நாளில் புதுக்கோட்டைச் சீமையில் உள்ளன. அவை முறையே அம்புகோயில், அம்புநாடு என்று இப்போதும் வழங்கப் பெறுகின்றன. அம்பு கோயிலில் உள்ள சிவன் கோவில் கல்வெட்டுக்கள் பலவற்றிலும் அவ்வூர் 'அழும்பில்' என்றே குறிக்கப்பட்டுள்ளது.

அழும்பில் நாட்டு வளம்

அழும்பில் நாடு வளம் படைத்த திருநாடு என்பதைப் புலவர் பலரும் கண்டு போற்றியுள்ளனர். குடவாயில் கீரத்தனுர் என்னும் புலவர் தம் நாட்டு வளத்தை அழும்பில் நாட்டு வளத்துடன் ஒப்பிட்டு உரைக்கின்ருர்.

> *'அழும்பில் அன்ன அருஅ யாணர்*
> *பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவை*
> *தண் குட வாயில் அன்னேள்.'*

என்பது அவர் பாடிய அகப்பாட்டின் ஒரு பகுதியாகும். மதுரைக் காஞ்சி பாடிய மாங்குடி மருதனுர் தமது நூலில் அழும்பில் நாட்டையும் அதன் தலைவராகிய வேளிளையும் வியந்து பாராட்டியுள்ளார்.

> *'நிலனும் வளமும் கண்டமை கல்லா*
> *விளங்குபெருந் திருவின் வான விறல்வேள்*
> *அழும்பில் அன்ன நாடிழந் தனரும்.'*

என்னும் அவர் பாட்டு அடிகளால் அழும்பில் நாட்டு வளமும் அந்நாட்டுத் தலைவராகிய வேளின் திறமும் நன்கு விளங்கும். அழும்பில் நாட்டு நிலத்தையும் அதில் விளைந்துள்ள பயிர்களின் வளத்தையும் கண்ணுல் பார்த்தவர்கள் தம் பார்வையை மாற்ருது வியப்புடன் பார்த்துக்கொண்டே யிருப்பர். அத்தகைய பெரு

வளம் படைத்த நாட்டின் தலைவராக விளங்கிய குறுநில மன்னர் அழும்பில் வேள்.

வானவிறல் வேள்

அழும்பில் நாட்டுக் குறுநில மன்னராகிய வேளியைத் தனக்கு அமைச்சராகக் கொண்ட செங்குட்டுவன், அவரது ஆற்றலைக் கண்டு 'வானவிறல் வேள்' என்று பட்டமளித்துப் பாராட்டினான். செங்குட்டுவன் அமைச்சர் அவையில் தலைவராக வீற்றிருந்த அழும்பில் வேள் சேரநாட்டின் செல்வத்தையும் செழிப்பையும் பெருக்கினார். அரசின் வருவாயையும் பெருக்கிக் கருவூலத்தை நிறைத்தார்.

சேரன் மலைவளம் காணல்

மலைவளம் படைத்த சேர நாட்டின் வருவாய்ப் பெருக்கைக் கண்ட செங்குட்டுவன் தன் நாட்டு வளத்தைக் கண்டு களிக்கக் கருதினான். தேவ மாதருடன் விளையாட விரும்பிய தேவேந்திரன் தனது ஐராவதத்தில் ஏறி ஆரவாரத்துடன் செல்வது போன்று செங்குட்டுவனும் தன் பட்டவர்த்தனக் களிற்றின்மேல் அமர்ந்து பரிவாரங்கள் புடைசூழப் புறப்பட்டான். திருமாலின் மார்பிடையே திகழும் முத்தாரம் போன்று பல்வகை மரங்களால் அழகுடன் ஒளிரும் மலையினை ஊடறுத்துக் கொண்டு இழியும் பேரியாறு என்னும் ஆற்றங்கரையின் மணல் நிறைந்த மேட்டிலே சென்று தங்கினான். அவனுடன் கோப்பெருந் தேவியாகிய இளங்கோவேண்மாளும் தம்பியாராகிய இளங்கோவடிகளும் அவைப் புலவராகிய சீத்தலைச் சாத்தனாரும் அமைச்சர் தலைவராகிய அழும்பில் வேளும் படைத்

தலைவராகிய வில்லவன் கோதையும் பிற அரசியல் சுற்றமும் அங்கு வந்து தங்கினர்.

மணல் மேட்டில் தங்கிய மன்னர் பெருமானாகிய செங்குட்டுவன் மலையிடத்தே எழும் பல்வேறு ஒலிகளையும் கேட்டும் ஆங்கமைந்த அரிய இயற்கைக் காட்சிகளைக் கண்டும் இன்புற்றுக் கொண்டிருந்தான். அவ்வேளையில் மலை வாழும் வேட்டுவக் கூட்டத்தார் மலையில் கிடைக்கும் அரிய பொருள்களையெல்லாம் அரசனுக்குக் கையுறையாகத் தலைமேல் தாங்கிச் செங்குட்டுவன் திருமுன் வந்து சேர்ந்தனர்.

வேட்டுவர், வேந்தனைக் காண்டல்

வேந்தனைக் கண்ட வேட்டுவர், தாம் கொண்டு வந்த மலைபடு பொருள்களையெல்லாம் அவன் திருமுன் வைத்து, "ஏழ்பிறப்படியேம், வாழ்க! நின் கொற்றம்" என்று வாழ்த்தி, அடிகளில் விழுந்து பணிந்தனர். செங்குட்டுவன் அவர்கட்கு மலர்ந்த முகங்காட்டித் திருமுடி அசைத்து நல்வரவு கூறினான். பின்னர், "நீவிர் வாழும் மலைநாட்டு நிகழ்ந்த சிறப்பு ஏதேனும் உண்டோ?" என்று அன்புடன் வினவினான். அது கேட்ட வேட்டுவர் தலைவன் அம்மலைநாட்டில் நிகழ்ந்த வியத்தகு நிகழ்ச்சியை வேந்தனுக்கு நன்கெடுத்து விளக்கினான்.

மலைநாட்டில் நடந்த நிகழ்ச்சி

"வேந்தர் வேந்தே! யாங்கள் வாழும் மலைக்கண்ணே ஓர் வேங்கை மரத்தின் நீழலில் மங்கை ஒருத்தி ஒரு மார்பினை இழந்தவளாய்ப் பெருந் துயரோடு வந்து நின்றாள். அச் சமயத்தில் விண்ணி

னின்று இறங்கிய விமானத்தில் தேவர்கள் பலர் அங்கு வந்துற்றனர். அவர்கள் அங்கு நின்ற மங்கைக்கு அவள் கணவனைக் காட்டி அவளையும் உடன் அழைத்துக் கொண்டு விண்ணுலகம் சென்றனர். இவ் அரிய காட்சியை யாங்கள் கண்ணாரக் கண்டோம். அம்மங்கை நல்லாள் எவ்வூரினளோ? யார் பெற்ற மகளோ? அறியோம். இது பெரியதொரு வியப்பாய் இருந்தது. தேவரீர் திருநாட்டில் நிகழ்ந்த இச்செய்தியினைத் தாங்கள் தெரிந்தருள வேண்டும்,'' என்று கூறி முடித்தான் அவ் வேட்டுவர் தலைவன்.

சாத்தனார் விளக்கம்

இவ்வாறு வேட்டுவர் தலைவன் விளம்பிய செய்தியை ஆங்கு உடனிருந்து கேட்ட புலவராகிய சீத்தலைச் சாத்தனார் அவ் வியத்தகு நிகழ்ச்சியைப் பற்றி வேந்தனுக்கு விளக்கிக் கூறினார். அவர் மதுரைமா நகரில் கோவலன் கொலையுண்டது முதலாய நிகழ்ச்சிகளை யெல்லாம் நேரில் கண்டறிந்தவராதலின் அவை அனைத்தையும் அரசனுக்குத் தெளிவாக எடுத்துரைத்தார்.

'' அரசர் பெருமானே! காவிரிப்பூம்பட்டினத்து வணிகனாகிய கோவலன் என்பான், தன் மனைவி கண்ணகியின் காற்சிலம்பை மதுரைமா நகரில் விற்று வாணிகம் செய்ய வந்தான். அவனைப் பாண்டியன் தன் தேவியின் சிலம்பைத் திருடிய கள்வன் என்று கொலை புரிவித்தான். அதனை அறிந்த கண்ணகி கடுஞ்சினம் கொண்டு பாண்டியன் அவையில் வழக்காடி வென்றாள். மற்றொரு சிலம்பை மன்னன் தேவியின் முன்னர் வீசி எறிந்து வஞ்சினம் கூறினாள். பின்னர்

அரண்மனையினின்று வெளிப்போந்து தனது ஒரு மார்பைத் திருகி வானில் வீசினாள். அதனினின்று எழுந்த பெருந்தீயால் மதுரைமாநகரை எரித்தாள். கண்ணகியின் வழக்கைக் கேட்ட மன்னன் தான் இழைத்த கொடுங்கோன்மைக்கு அஞ்சி நெஞ்சம் பதைத்தான். அத் துயரம் தாங்காது அரியணைமீதே விழுந்து உயிர் துறந்தான். அவன் கோப்பெருந்தேவி கணவனை இழந்த கடுந்துயர் பொறுளாய் 'மன்னவன் சென்றவிடத்து யானும் செல்வேனாக' என்று கூறிய வளாய்த் தன்னுயிர் கொண்டு அவன் உயிர் தேடிய வளைப்போல அவ்விடத்திலேயே உயிர் நீத்தாள். கண்ணகியோ அப் பாண்டியனது கொடுங்கோன்மை இத்தன்மையது என்பதைப் பெருவேந்தனாகிய நின் னிடத்துக் கூற வந்தவள் போலத் தன் நாடாகிய சோழ நாட்டிற்குச் செல்லாமல் நின்னொடு புகுந்தாள். அரசே! நின் கொற்றம் சிறப்பதாக!''

செங்குட்டுவன் தெளிவு

இங்ஙனம் சீத்தலைச் சாத்தனார் இயம்பிய செய்தி களைக் கேட்ட செங்குட்டுவன் பெரிதும் வருந்தினான். பின் புலவரை நோக்கிப், ''புலவர் பெருமானே! பாண்டியன் செங்கோன்மையில் தவறிய செய்தி, என் னைப் போன்ற மன்னர்களின் செவிகளில் விழுவதற்கு முன்னால் உயிர் நீத்தான். அச் செயல் தீவினையால் வளைக்கப்பட்ட அவனது கோலை உடனே நிமிரச் செய்து செங்கோலாக்கி விட்டது. மன்பதை காக்கும் மன்னர் குடியில் பிறத்தல் துன்பமே அல்லா மல் தொழத்தக்க சிறப்பொன்றும் இல்லை,'' என்று கூறி உள்ளம் தேறினான்.

வேண்மாள் விருப்பம்

பின்னர்ச் செங்குட்டுவன் தன் அருகில் இருந்த பெருந்தேவியாகிய இளங்கோ வேண்மாளின் உளக் கருத்தை உணர விரும்பினன். "தேவீ!" கணவ னுகிய பாண்டியனுடன் தன்னுயிரை நீத்த அவன் கோப்பெருந்தேவியும், கணவனை இழந்த கடுந்துயர் பொருது மதுரைமாநகரை எரித்துச் சினத்துடன் நம் நாடு நோக்கி வந்த கண்ணகியும் ஆகிய இருபெரும் பத்தினியருள்ளே வியந்து போற்றும் சிறந்த கற்புடை யார் யார்?" என்று அவளை உசாவினன்.

கணவனது வினைக் கேட்ட பெருந்தேவியாகிய வேண்மாள் நன்கு ஆய்ந்து மறுமொழி நவின்ருள். 'காதற் கணவனது துன்பத்தைக் காணுது உயிர் நீத்த பாண்டியன் தேவி-வானுலகில் பெருந்திருப் பெறுவா ளாக! நம் நாட்டை நோக்கி வந்த பத்தினித் தெய்வ மாகிய கண்ணகியை நாம் வழிபடுதல் கடனுகும்,' என்று அவள் கட்டுரைத்தாள். கணவனுகிய கோவல னுக்கு மதுரைமாநகரில் ஏற்பட்ட கள்வனென்ற பழிச் சொல்லை ஒழித்துத், தனது கற்புத்திறத்தைக் காட்டி, இருவர் புகழையும் நிலைநாட்டிய கண்ணகியே பெண் களிற் சிறந்த பெருமாட்டியாவாள் என்று அப்பெருந் தேவி பேசினள்.

குறிப்புணர்ந்த அமைச்சர்

கோப்பெருந்தேவி தனது கூர்த்த மதியால் ஆராய்ந்து கூறிய சொற்களைச் செங்குட்டுவன் செவி யாரக் கேட்டு மகிழ்ந்தான். அவள் கருத்தை ஏற்று அருகில் வீற்றிருந்த அமைச்சர் தலைவராகிய அழும்பில் வேளை நோக்கினன். மதிநுட்பம் நூலோடுடைய

மந்திரத் தலைவராகிய அவர், "அரசே! நம் நாட்டு நோக்கி வந்த அப் பத்தினிக் கடவுட்குப் படிவம் சமைத் தற்குரிய சிலையைப் பொதிய மலையினின்றேனும் இமய மலையினின்றேனும் எடுத்து வருதலே ஏற்புடைத்தா கும். பொதியத்தினின்று கொணர்வதைக் காவிரியினும் இமயத்தினின்று கொணர்வதைக் கங்கையினும் நீராட் டித் தூய்மை செய்தல் பொருத்தமாகும்," என்று கூறி ஞர்.

*'குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்*
*யாது கொடுத்துங் கொளல்.'*

என்றார் தெய்வப்புலவர். கோப்பெருந்தேவியின் உள் ளக் குறிப்பும், கொற்றவனாகிய செங்குட்டுவன் உள் ளக் குறிப்பும் அவர்கள் முகத்தாலும் கண்களாலும் நுனித் துணர்ந்த நுண்ணறிவாளராகிய அழும்பில் வேள் அவர்கள் கருத்திற்கு ஏற்பச் சிறந்த முறையில் தெரிந்துரைத்தார்.

வேந்தன் வீரவுரை

அமைச்சராகிய அழும்பில்வேள் கூறிய மறு மொழியைக் கேட்ட மன்னன், "பொதிய மலையில் கல்லெடுத்துக் காவிரியில் நீராட்டல் வீரம் மிக்க சேரர் குடிப்பிறந்த எங்கட்குச் சிறப்பைத் தரும் செயலன்று. ஆதலின் இமயத்தினின்று கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டி வருதலே நம் பெருமைக்குத் தக்கதாகும். வட நாட்டு மன்னர் நம் விருப்பிற்கு இணங்காது தடுப்பா ராயின் இங்கிருந்து வஞ்சிமாலை சூடிய படைகளுடன் புறப்படுவோம். நம் வீரத்தைக் காட்டி வெற்றியுடன் இமயக்கல்லை எடுத்து வருவோம்," என்று வீரவுரை பகர்ந்தான்.

வில்லவன்கோதை வீரமொழி

செங்குட்டுவன் செப்பிய வீரமொழிகளைக் கேட்ட வில்லவன்கோதை என்னும் படைத்தலைவர், "வேந்தர் வேந்தே! வாழ்க! நும்மைப் போன்ற வேந்தர்களான சோழ பாண்டியர் நும்மோடு பகைத்துக் கொங்கர் செங் களத்தே தம் புலிக்கொடியையும் மீனக்கொடியையும் போரில் இழந்து ஓடினர். அச்செய்தி எட்டுத் திசை யானைகளின் செவிவரை சென்று எட்டியது. கொங்க ணர், கலிங்கர், கருநடர், பங்களர், கங்கர், கட்டியர், வடவாரியர் இவருடன் நம் தமிழ்ப்படை கலந்து பொருத போர்க்களத்தில், தாம் யானையை விட்டுப் பகைவரை அழித்த அரிய செயல் இன்னும் எங்கள் கண்களை விட்டு அகலவில்லை. அன்றியும் எம் கோமகளாய் விளங்கிய நும் தாயைக் கங்கையில் தீர்த்த மாட்டி வந்த அந்நாளில் எதிர்த்து வந்த ஆரிய அரசர் ஆயிரவர் முன் தாம் ஒருவராக நின்று பொருத போர்க் கோலத்தைக் கடுங்கட் கூற்றமும் கண் விழித்து நோக் கியவாறே வியந்து நின்றதன்றோ? கடல் சூழ்ந்த இந் நிலவுலகத்தை வென்று தமிழ் நாடாக்க வேண்டித் தாம் வடநாட்டில் யாத்திரை செய்யக் கருதினால், ஆங்கு நும்மை எதிர்ப்பவர் எவருமே இல்லை என்பது உறுதி. ஆதலின் வடநாட்டில் வாழும் அரசர்க்கெல் லாம், வில், கயல், புலி இவற்றை முத்திரையாகக் கொண்ட நும் திருமுகத்தை முன்னே விடுத்தருளல் வேண்டும்," என்று கூறினார்.

அழும்பில்வேள் அறிவுரை

படைத்தலைவராகிய வில்லவன் கோதை சொல் லிய நன்மொழிகளைக் கேட்ட அழும்பில் வேள், நாட்

டின் நிலையையும் அரசின் ஏற்றத்தையும் நன்கு அறிந்த வராதலின், "இந்நாவலந் தீவில் நம் பகைவராயுள்ள அரசர்களின் ஒற்றர்கள் இவ் வஞ்சிமாநகரை விட்டு நீங்காது சுற்றித் திரிகின்றனர். அவ் ஒற்றர்களே பகையரசர் செவிகளில் நம் வடநாட்டு யாத்திரை பற்றிய செய்திகளைச் சென்று தெரிவிப்பர். ஆதலின் நம் செலவை இந்நகரில் மட்டும் பறையறைந்து தெரி வித்தால் போதும்," என்று எடுத்துரைத்தார். செங் குட்டுவனும் அதற்கு இசைந்தனன். பின்னர்ப் பேரி யாற்றங் கரையினின்று புறப்பட்டு, அரசன் தன் பரிவாரத்துடன் வஞ்சிமாநகரை அடைந்தான். அரசன் நகருள் புகுந்ததும் அவனது வடநாட்டு யாத்திரை பற்றிய செய்தி, யானைமேல் முரசேற்றி அறைந்து அறிவிக்கப் பெற்றது.

அமைச்சரது ஆட்சித்திறன்

செங்குட்டுவன், நிமித்திகன் கூறிய நன்னாளில் பத்தினித் தெய்வத்தைச் சமைத்தற்குரிய கல்லை எடுத் தற்கு வடதிசை நோக்கிப் புறப்பட்டான். அவன் வட நாடு சென்று மீள முப்பத்திரண்டு திங்கள் ஆயின. அத்துணை நீண்ட கால முழுதும் அமைச்சராகிய அழும்பில் வேளே சேர நாட்டின் அரசியலை நடத்தி யிருக்க வேண்டும். அக்காலத்தில் சேரநாடு குழப்ப மின்றி மிகவும் அமைதியாகவே விளங்கியது. சேரநாட் டுக் குடிகள் அந்நாளில் செங்குட்டுவன் வடநாட்டில் அடைந்த வெற்றிகளைக் கேட்ட பொழுதெல்லாம் பெரு மகிழ்ச்சியுற்றவர்களாய்த் தாம் பெற்ற பெருமையாகவே கொண்டு மகிழ்ந்தனர். இவற்றிற்கெல்லாம் காரண மாக விளங்கியது அமைச்சர் அழும்பில் வேளின் ஆட்

சித் திறனே ஆகும். அவர் அமைச்சர்க்கு வேண்டும் நுண்ணறிவு, நூலறிவு, சொல்வன்மை, வினைத்திட்பம், வினைத்தூய்மை முதலிய அரிய திறமைகளைப் பெற்றிருந்தமையாலேயே மன்னன் இல்லாத காலத்திலும் மக்கள் மகிழ்ந்து போற்றுமாறு நாட்டைக் காத்தார்.

---

## ௯. அதியமான் மதியமைச்சர்

### அஞ்சியின் அருமை

கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த வள்ளல்கள் எழுவருள்ளே ஒருவன் அதியமான் நெடுமான் அஞ்சி என்பான். அவன் அதியர் என்னும் குறுநில மன்னர் குடியில் பிறந்த சிறந்த அரசன். அவன் தனது வீரத் தாலும் ஈகையாலும் இணையற்று விளங்கினன். அதனல் அதியர் குடிப்புகழ் சிறப்புற்று ஓங்கியது. அவ்வாறு தன் குடிப்பெருமையைப் பெருக்கிய அதிய மானை அதியமான் நெடுமான் என்று புலவர் பலரும் போற்றினர். அவனது இயற்பெயர் அஞ்சி என்பதே.

### அதியர் பெருமை

சேலம் மாவட்டத்தில் இற்றை நாளில் தர்மபுரி என்று வழங்கும் தகடூரைத் தலைநகராகக் கொண்டு அதியர் என்னும் அரச மரபினர் ஆண்டு வந்தனர். அவர்கள் சேர மன்னரோடு உறவுபூண்டு ஒழுகுபவர் ஆதலின் அச் சேரர்க்கு உரிய பனம் பூ மாலையையே தாமும் மாலையாகப் புனைந்து கொள்வர்.* பெறுதற் கரிய இனிமை வாய்ந்த கரும்பைப் பிறநாட்டினின்றும் முதன் முதல் தமிழகத்திற்குக் கொண்டு வந்தோர் இவ் அதியரே. கொல்லிக்கூற்றமும் குதிரைமலையும் இவருக்கு உரியனவாய் இருந்தன.

இத்தகைய பெருமை மிக்க அதியர் மரபிலே பிறந்த அஞ்சி எவர்க்கும் அஞ்சாத ஆண்மையுடையான். இவனுக்கு எழினி என்ற மற்றொரு பெயரும் வழங்கும். இவனைப் பாடிய புலவர் பலராயினும், பாரியைப் பாடிய

கபிலரைப் போலவும், ஆயைப் பாடிய மோசியைப் போலவும் இவன் புகழ் விளங்குமாறு விரிவாகப் பாடி யவர் ஔவையார் ஒருவரே.

ஔவையார் அதியமானை அடைதல்

அதியமான் நெடுமான் அஞ்சியின் படைத் திறத்தையும் கொடைத் திறத்தையும் பலர் வாயிலாகக் கேட்டறிந்த ஔவையார் அவன் வாழும் தகடூரை நோக்கிச் சென்றார். அவனைக் கண்டு அவன் புகழ் பாடினார். தமிழ்மூதாட்டியாராகிய ஔவையாரின் செவ்விய புலமையையும் செய்யுள் நலனையும் கண்டு அதியமான் கழிபேருவகை கொண்டான். அவரைத் தன் அவைப் புலவராகவும் மதியமைச்சராகவும் ஏற்று மகிழ்ந்தான். படை வலியால் பன்னாட்டு மன்னரையும் வென்று பகைவரைப் பெருக்கி வைத்திருந்த அதியமானுக்கு ஔவையாரின் அறிவுரை மிகவும் இன்றியமையாததாக இருந்தது. அதனை உணர்ந்த அதியமான் அவரை அமைச்சராக ஏற்றதில் வியப்பில்லை. அதனாலேயே அவன் ஔவையாரைச் சிறுபொழுதும் பிரிதற்கு விரும்பினானல்லன். அவர் எப்பொழுதும் அருகிலிருந்து அறிவுரையும் ஆறுதலுரையும் தனக்குக் கூறிக்கொண்டிருத்தலைப் பெரிதும் விரும்பினான்.

பாணர் மரபில் தோன்றிய பாவையார்

அதியமான் அவையில் அமைச்சராக விளங்கிய ஔவையார் பாணர் மரபில் தோன்றிய பாவையார் ஆவர். யாழிசைத்துப் பண்ணமையப் பாடும் மரபினர் பாணர் எனப்படுவர். அப்பாணர் குலத்தில் தோன்றிய பெண்களைப் பாடினியர், விறலியர் என்ற பெயர்களால்

குறிப்பர். பாணர் பாடும் பாடலுக்கு ஏற்ப ஆடும் இயல்பினர் விறலியர். தாமும் பாடிக்கொண்டு ஆடும் பண்புடையார் பாடினியர் எனப்படுவர். ஆடலும் பாடலும் வல்ல அரிவையாராகிய ஔவையார், இளமையிலேயே புலமை மிக்கு விளங்கினர். அவருடைய அறிவும் திறலும் கண்ட ஆடவர் அவரை மணஞ்செய்து கொள்ள அஞ்சினர்போலும்! அன்றித் தமது புலமையை உலகிற்கு நன்கு பயன் படுத்த வேண்டும் என்ற அருள் உள்ளத்தால் அவர் இல்லற வாழ்க்கையில் ஈடுபடாது இருந்தனரோ? இன்னதென அறியோம். அவர் இளமையிலேயே துறவுநெறி பூண்டு தூய வாழ்வை மேற்கொண்டு ஒழுகினர். நல்லிசைப் புலமை மெல்லியலாராய் நாடெங்கும் சுற்றி மன்னர்களையும் வள்ளல்களையும் இன்னிசைப் பாக்களால் புகழ்ந்து பாடினர். அவர்கள் அன்புடன் வழங்கிய கொடையைப் பெற்று வாழ்வைத் தடையிலாது நடத்தினர்.

அமைச்சர் ஔவையார்

இத்தகைய பரிசில் வாழ்க்கையை உடைய பைந்தமிழ் மூதாட்டியாரை அதியமான் தனக்கு அறிவுரை கூறும் அமைச்சராகப் பெற்றான். அதியமானுக்கு ஒருநாள் அருமையான நெல்லிக்கனியொன்று கிடைத்தது. அஃது அவன் நாட்டு மலையொன்றின் உச்சியில் மக்கள் ஏறுதற்கரிய உயரத்தில் அமைந்த பிளவில் தோன்றிய நெல்லி மரத்தினின்று அரிதாகக் கிடைத்தது. அது பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை பழுப்பதாய சிறப்புடையது. அதனை உண்டார் ஊறின்றி நெடுநாள் உடலுரத்துடன் வாழ்வர். அத்தகைய

அருங்கனியைப் பெற்ற அதியமான் தன் அரசவையில் அறிவுரையும் அறவுரையும் வழங்கும் அமைச்சராக அருந்தமிழ் மூதாட்டியார் அமர்ந்திருத்தலைக் கண்டான். இக்கனியினை இவ்வம்மையார் உண்டு பல்லாண்டு பாரில் வாழ்வாராயின் எத்தனையோ உண்மைகளை மக்கள் உய்யுமாறு வழங்குவார். இதனை நாம் உண்டு நெடுநாள் நிலவுலகில் வாழ்ந்தோமாயின் அடுபடை கொண்டு அளவற்ற உயிர்களைப் போரில் கொன்று குவிப்போம். ஆதலின் இதனை ஔவையாரே அருந்து தல் வேண்டும் என்று மனத்துள் துணிந்தான். உடனே அதனை ஔவையார் கையில் கொடுத்து உண்ணுமாறு வேண்டினன். பிறர் அன்புடன் அளிக் கும் பொருள் எதுவாயினும் இன்புடன் வாங்கிக் கொள் ளும் இயல்பினராகிய அம்மையார் அதனை இகழாது மகிழ்வுடன் வாங்கி உண்டார். அதனை உண்டபின் அதன் அமுதனைய அரிய சுவையினைக் கண்டார். நல்லமுதனைய இந்நெல்லிக்கனி புதுமையாக அன்றோ இருக்கின்றது என்று வியந்தார்.

### நெல்லிக்கனி யீந்த வள்ளல்

அமைச்சராகிய ஔவையாரின் வியப்பினைக் கண்ட அதியமான் அதன் சிறப்புக்களை விரித்துரைத் தான். "இச் செய்திகளை முன்னரே யான் மொழிந் திருப்பேனாயின் நீவிர் இக்கனியினை அருந்தியிருக்க மாட்டீர்; நும்மைப் போன்ற நுண்ணறிவாளர் பன் னெடுங்காலம் இப்பாருலகில் வாழ வேண்டும் என்னும் பேரார்வத்தாலேயே அதனை உமக்களித்தேன்," என்று உவகையுடன் உரைத்தான். அதியமானின் அன்புரை களைக் கேட்டு அகமுருகிய தமிழ் மூதாட்டியார் அவனது

உயர்ந்த பண்பை உளமாரப் பாராட்டிச் சிறந்ததொரு செந்தமிழ்ப் பாவால் அவனை வாழ்த்தினர்.

> " போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி
> பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
> நீல மணிமிடற்(று) ஒருவன் போல
> மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
> பெருமலை விடரகத்(து) அருமிசைக் கொண்ட
> சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
> ஆதல் நின்னகத்(து) அடக்கிச்
> சாதல் நீங்க எமக்கீத் தனையே.'

'பகைத்தெழுந்த போரில் எதிர்த்து வந்த மன்னரை வென்று வெற்றிமாலை புனையும் அஞ்சியே! பால் போலும் வெண்மையான பிறைமதியைச் சடைமுடியில் அணிந்துள்ள ஆலமுண்ட நீலகண்டனைப் போல நீ எந்நாளும் மன்னி வாழ்வாயாக! பெரிய மலையின் அரிய பிளவில் தோன்றிய நெல்லி மரத்தில் பல்லாண்டுகளுக்கு ஒரு முறை பழுப்பதாகிய கனியின் சிறப்பினை என்பால் சிறிதும் குறிப்பிடாது மனத்தின் கண் மறைத்தவனாய் யான் இறவாதிருக்குமாறு அருளுடன் ஈந்தனையே! நினது அன்பை என்னென்பேன்!' என்று அவனை வாயார வாழ்த்தி மகிழ்ந்தார்.

அதியமான் தனது அறிவுசால் அமைச்சராகிய ஔவையாருக்கு அமுத நெல்லிக்கனி யீந்த அருஞ்செயலைப் பிற புலவர்களும் வியந்து பேசினர். 'மால்வரைக் கமழ்பூஞ்சா்ரல் கவினிய நெல்லி அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த அதிகன்' என்று நல்லூர் நத்தத்தனர் என்னும் புலவர் நயந்து போற்றினர். இனிய கனியைப் பற்றிக் கூற வந்த உரையாசிரியராகிய பரிமேலழகர், 'ஔவையுண்ட நெல்லிக்கனி போல அமிழ்தாவனவற்றை' என்று பாராட்டினர்.

### அதியமான் வேட்கையும் அமைச்சர் அருஞ்செயலும்

வள்ளல் அதியமான் உடல்வலியும் படைவலியும் பெரிதும் படைத்தவன். அவன் போர் வேட்கைமிக்க பெருவீரனாய் விளங்கினான். அதனால் அவனுக்குப் பகைவர் பலராயினர். அப் பகைவரால் அதியமானுக்கு ஊறு நேராவாறு காப்பதைத் தமது கடனெனக் கருதினார் ஔவையார். தம்மை ஆதரிக்கும் அரசனும் அவன் நாட்டு மக்களும் அமைதியான நல் வாழ்வை நடத்தவேண்டுமே என்று கருத்துட் கொண்டார். ஆதலின் தகடூர் நாட்டின்மீது படையெடுக்க முற்படும் பகைவர்களைப் பரிசிலாளரைப்போல் சென்று கண்டு நல்லுரை நவின்று வருவார். அதியமான் படைவலியை எடுத்துரைத்துப் பகைவர்க்கு அச்சம் ஊட்டி வருவார். அம்முறையில் ஔவையார் அதியமான் பகைவர்களை நோக்கிக் கூறிய அறிவுரைகள் பல.

### அதியமான் பகைவர்க்கு அறிவுரை

" அதியமான் தன்பால் வரும் இரவலர்க்கு எண்ணற்ற தேர்களைப் பரிசாக வழங்குவான். புலவர்கள் அவன் தேர்ப்படைக்கு உவமையாக மாருது பெய்யும் மழைத்துளிகளைக் குறிப்பர். அங்ஙனமாயின் அவன் தேர்ப்படையின் அளவை என்னால் இயம்பவொண்ணுமோ? அவன் நாட்டுத் தச்சர் ஒவ்வொருவரும் நாள் ஒன்றிற்கு எட்டுத் தேர்களைச் செய்யும் தொழில் திறமுடையார். கோடுகளில் செறித்த இருப்புத் தொடிகள் பிளக்குமாறு பகைவர் தம் கோட்டைவாயிற் கதவைக் குத்திச் சிதைக்கும் குன்றனைய யானைப்படையை மிகுதியாகக் கொண்டவன். போர்க்களத்தில் கூடித்தாக்கும் கொடும்படை வீரர்களின் மார்பு குலைந்து பிளந்து

சிதையுமாறு மிதித்தோடும் குதிரைப் படையினைப் பெரிதும் படைத்தவன். பகைவரை வெட்டி வெட்டிக் கூர்மை மழுங்கின வாளையும், குத்திக்குத்திக் கோடும் நுதியும் சிதைந்து செப்பனிடப் பெற்ற வேலையும் தாங்கிய வீரர்கள் கடல்போல் பரந்து காணப்படுவர். அவ் வீரர்கள் அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிர் மண்டும் அரவினையொத்த ஆற்றல் படைத்தவர். இத்தகு பெரும் படையினைப் பணி கொள்ளும் பேராற்றல் படைத்தவன் அதியமான் ஆதலால் பகைவர்களே! அதியமான் இளையன், எளியன் என்று இகழன்மின்! அவனோடு போரிட்டு வெல்லுவோம் என்று நினையன்மின்! உங்கள் நாடும் நகரும் உங்களுக்கே உரியனவாக இருக்க விரும்பின், அவன் வேண்டும் திறை கொடுத்து உய்ம்மின்! மறுப்பின் அவன்விடான். நான் கூறும் இந் நல்லுரைகளைக் கேட்டு நடவீராயின் நீவிர் நுந்தம் உரிமை மகளிரைப் பிரிந்து உயர்ந்தோர் உலகம் புகுவது உறுதி.

### அதியமானுக்கு அறிவுரை

இவ்வாறு அதியமான் பகைவர்க்கு அறிவுரை கூறிய ஔவையார் அவ் அதியமானுக்கும் அறிவுரை கூறத் தவறினாரல்லர். “அரும்போர் வல்ல அதிய! வலிமிக்க புலியொன்று சீறி எழுந்தால் அதனை எதிர்த்துத் தாக்கவல்ல மான்கூட்டம் இம்மாநிலத்தில் உண்டோ? கதிரவன் வானில் செங்கதிர் பரப்பி எழுந்த பின்னர் இருள் நீங்காது நிற்பதுண்டோ? பாரும் அச்சும் ஒன்றோடொன்று உராயுமாறு மிக்க பாரத்தை ஏற்றிய வண்டி மணலில் ஆழப் புதைந்த வழியும் அப் பாரம் கண்டு கலங்காது, மணல் பரக்கவும்

கல் பிளக்கவும் செல்லவல்ல எருதிற்குப் போதற்கரிய வழியிது என்று கூறத்தக்க வழியும் உளதோ? இவை போன்றே நீ போர்க்களம் நோக்கிப் புறப்படின் நின்னை எதிர்க்கவல்ல வீரரும் உளரோ! உலகில் இலராதலின் நீ களம்புகும் கருத்தை ஒழிக!" என்று அதியமானுக்கும் அறிவுரை கூறி அவனது போர் வேட்கையைத் தணிக்க முயலுவார்.

### அமைச்சரின் துணிவு

அமைச்சராகிய ஔவையார் கூறும் அறிவுரைகள் சில சமயங்களில் அதியமான் செவியில் ஏறுவதில்லை. 'பகைவரை அச்சுறுத்திப் பணிய வைத்தல் இயலாது; ஆதலின் அவரைப் போரில் எதிர்த்தே வெல்லுவேன்' என்று அவன் வெகுண்டுரைப்பான். அவன் அவ்வாறு வெகுண்டபோதும் ஔவையார் அவனுக்கு அறிவுரை கூற அஞ்சுவதில்லை. நாட்டின் அமைதியையும் மக்கள் நலனையுமே பெரிதாகக் கருதிய அம்மையாருக்கு அவனது வெகுளி சிறிதும் வேதனையை விளைக்கவில்லை. இங்ஙனம் அதியமானுக்கும் அவன் பகைவர்க்கும் அறிவுரை கூறி நாட்டின் அமைதியைக் காக்க நாட்டங் கொண்டார்.

### தொண்டைமானிடம் தூது போதல்

காஞ்சிமா நகரைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் அதியமான்பால் பகைமை கொண்டான். அவன் தன்பால் படைவலி மிக்கிருப்பதாக எண்ணிச் செருக்குற்றான். அவனது அறியாமையைத் தெரிந்த அதியமான், போரின் கொடுமையையும், தன்னை எதிர்த்தால்

அவன் வலியிழந்து அழிவது உறுதியென்பதையும், அதனால் நாட்டிற்கும் மக்களுக்கும் நேரும் கேட்டையும் தெளிந்து கொள்ளுமாறு அவனுக்கு அறிவுறுத்த நினைந்தான். அவன்பால் தூது சென்று அச் செயலைச் செம்மையாகச் செய்து வருதற்குத் தகுதியுடையார் ஔவையாரே என எண்ணினான். அவ்வாறே அவரைத் தொண்டைமானிடத்துத் தூதுவிட்டான். அயல் நாட்டு அரசன்பால் பெண்ணொருத்தி தூது சென்று ஓதினாள் என்னும் பெருமை உலகிலேயே முதன் முதல் தமிழகத்திற்கும் தமிழ் மூதாட்டியாராகிய ஔவையாருக்குமே வாய்த்தது.

### மூவகைத் தூதர்

அயல்நாட்டு மன்னரிடத்துத் தூதுரைக்கச் செல்பவர் மூவகையினர் ஆவர். வகுத்துக் கூறுவார், கூறியது கூறுவார், ஓலை கொடுத்து நிற்பார் என்று அவர்களை வகைப்படுத்துவர். அமைச்சியல் வகுத்த வள்ளுவர் அமைச்சரே தூது செல்லுதற்கும் தகுதியுடையார் என்னும் கருத்தால் அப்பகுதியில் தூதர் இலக்கணத்தையும் விளக்கினார்.

### தூதர் இலக்கணம்

தூதராவார் அமைச்சுரிமை பூணற்குரிய குடிப் பிறப்பும், அரசர் விரும்பும் பண்பும், சுற்றத்தார் மாட்டுப் பற்றும் பெற்றவராய் இருத்தல்வேண்டும். அரசரிடத்து அன்பும் எதனையும் ஆராய்ந்து பேசும் அறிவாற்றலும் அவர்பால் அமையவேண்டும். கண்டார் விரும்பும் தோற்றப் பொலிவு கொண்டவராய் இருத்தல் வேண்டும். அயலரசர்பால் சொல்லத்தக்க செய்திகள் பலவாயின் அவற்றைத் தொகுத்துச் சொல்லுதல்,

துன்பம் விளைக்கும் செய்திகளைச் சொல்லுங்கால் இனிய சொற்களால் மனம் மகிழுமாறு சொல்லுதல் இவை போன்ற சொல்வன்மையால் தம் அரசர்க்கு நன்மை விளைக்கும் உண்மையாளராய் இருத்தல் வேண்டும். செய்திகளைச் சொல்லுங்கால் பகை மன்னர் சினந்து நோக்கின் அஞ்சாது காலத்தொடு பொருந்தக் கூறித் தாம் சென்ற கருமத்தை முடிக்க வல்லவராய் இருத்தல் வேண்டும். கடமையை உணர்ந்து, தம் செயலை முடிக்கும் காலத்தை நோக்கி, அதனைச் சொல்லுதற்குரிய இடத்தைத் தெரிந்து, சொல்லும் முறைமையெல்லாம் முன்பே ஆராய்ந்து வகுத்துரைக்கும் வல்லமையுடையாரே தலையாய தூதராவர். தம் அரசர் சொல்லியனுப்பிய சொற்கள், தம் உயிர்க்கே இறுதி தருமாயினும் அதற்கு அஞ்சி ஒழியாது, தம் அரசர் கருத்தை வேற்றரசர்பால் விளக்கியுரைப்பவரே சிறப்புடைய தூதராவர்.

அரசியல் தூதர் ஔவையார்

தலையாய தூதர்க்கு அமைய வேண்டிய நிலையாய பண்புகளெல்லாம் ஒருங்கே அமையப் பெற்ற ஔவையார் அதியமான் தூதராகக் காஞ்சிமாநகரம் புகுந்தார். அவர் தூதராக வந்தாலும் அருந்தமிழ்ப் புலமையாளர் என்பதை நன்குணர்ந்த தொண்டைமான் அவரை அன்புடன் வரவேற்று உபசரித்தான். அவர் தன்பால் வந்துள்ளதன் நோக்கத்தையும் குறிப்பால் அறிந்துகொண்டான். அதியமானினும் மிகுந்த படைவலியுடையோம் என்பதை அவருக்கு அறிவித்துவிட்டால் அவர் ஒன்றுமே பேசாது சென்றுவிடுவார் என்று எண்ணினன். அவன் தனது எண்ணத்தை வாயால்

கூற விரும்பவில்லை. அவருக்குத் தன் அரண்மனை முற்றும் சுற்றிக் காட்டுவான்போல அவரை அழைத்துச் சென்று பல இடங்களையும் காட்டினான். படைக்கலங்களை அணிசெய்து வைத்திருக்கும் தன் படைக்கலச் சாலைக்குள்ளும் அவரை அழைத்துச் சென்றான். ஆங்கே அணியணியாக அடுக்கி வைத்திருக்கும் படைக்கலம் அனைத்தையும் பார்க்குமாறு செய்தான்.

தொண்டைமானுக்கு அறிவுரை

தொண்டைமான் உள்ளக்குறிப்பைத் தெள்ளிதின் உணர்ந்து கொண்டார் ஒளவையார். தொண்டைமானே தூதுவந்த மூதாட்டியாருக்குத் தக்க அறிவூட்டினேம் என்ற பெருமித உணர்ச்சியுடன் நின்றான். அதனைக் கண்ட ஒளவையார், "அரசே! இங்குள்ள வேற்படையெல்லாம் எத்துணை அழகுடன் விளங்குகின்றன! பீலியும் மாலையும் சூட்டப்பெற்றும் திரண்ட காம்பு திருத்தப் பெற்றும் நெய் பூசப்பெற்றும் ஒளியுடன் திகழ்கின்றன. இவையெல்லாம் காவலையுடைய கோவிலின்கண் அழகாக வைக்கப்பட்டுள்ளன. ஆனால் அதிகமானுடைய வேற்படைகளோ காவல் மனையில் வைக்கப் பெறவில்லை. அவையெல்லாம் பகைவரைக் குத்திக் குத்திக் கங்கும் நுனியும் முறிந்து சிதைந்தவை. அவை செப்பனிடுதற்காகக் கொல்லன் உலைக்களமாகிய சிறிய கொட்டிலில் எந்நாளும் கிடக்கும்" என்று கூறித் தொண்டைமானை இகழ்ந்து நோக்கினார்.

*'இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்*
*கண் திரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து*
*கடியுடை வியனக ரவ்வே யவ்வே*
*பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து*

*கொற்றுறைக் குற்றிலம் மாதோ என்றும்*
*உண்டாயின் பதங்கொடுத்(து)*
*இல்லாயின் உடனுண்ணும்*
*இல்லோர் ஒக்கல் தலைவன்*
*அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.*

என்ற அரிய பாடலைப் பாடினார்.

தூதரின் நாநலம்

அது கேட்ட தொண்டைமான் உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளியது. ஔவையார் தன் கருத்தையும் படைப்பெருக்கையும் நன்றாகத் தெரிந்து கொண்டார்; இனி அதியமான் நமக்கு அஞ்சி அடிபணிவான் என்று தவறாகக் கருதினான். ஔவையாரோ அவனது அறியாமைக்கு இரங்கினார். அவர் அதியமான் அனுப்பிய தூதராக வந்தவர். தம் கடமையைத் தவறாது செய்துவிட்டார். அவர் தொண்டைமான் முன்னர்ப் பாடிய பாடல் வஞ்சப் புகழ்ச்சியாக அமைந்தது. தொண்டைமான் படைக்கலச் சிறப்பைப் பாராட்டுவது போலத் தோன்றினாலும் அது பழிப்புரையே. அதியமானை இகழ்ந்துரைப்பது போல இருந்தாலும் புகழ்ந்துரைக்கும் பொன்மொழியாகவே அப்பாடல் அமைந்தது. தொண்டைமான் படைக்கலங்கள் போரில் பயன்படுத்தப் படாதவை; காவற்கூடத்தை விட்டு என்றும் அகலாதவை; போர்க்களத்தையே கண்டறியாதவை; அதனால் அவை என்றும் அழகுடன் இருக்கின்றன என்று புலப்படுத்தி, அவனது ஆண்மையை நயமாக எள்ளி நகையாடிய ஔவையாரின் நாவன்மையை என்னென்பது!

இவ்வாறு தொண்டைமான் படைக்கலத்தைப் பழித்துரைத்த பைந்தமிழ் மூதாட்டியார் அதியமான்

படையாற்றலைப் போற்றாதிருக்கவும் இல்லை. அத் தொண்டைமான் முன்னாலேயே அதியமான் படைக் கலங்கள் அடியும் நுனியும் சிதைந்து கொல்லன் உலைக்களத்தில் கிடக்கின்றன என்று கூறினார். அதனால் அதியமான் படைகள் போரில் பலகால் பயன் படுத்தப்பட்டவை; பகைவர் படைகளைத் தாக்கித் தாக்கிப் பழுதுற்றவை; மீண்டும் போர்வரின் பயன் படவேண்டும் என்பதற்காகக் கொல்லன் உலைக் களத்தில் வந்து குவிந்துள்ளன என்று புலப்படுத்தி, அவனது போராற்றலையும் படைவலியையும் பழிப்பது போன்று குறிப்பாகப் பாராட்டிய மூதாட்டியாரின் அரசியல் நுண்ணறிவை என்னென்பது!

---

## எ. அமைச்சர் குலச்சிறையார்

தமிழ் வளர்த்த தண்பாண்டி நாட்டை மதுரைமா நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மன்னர்களுள் ஒருவன் நெடுமாறன் என்பான். இவன் மாறவர்மன் என்னும் பட்டம் புனைந்தவன். இவனைச் சுந்தரபாண்டியன் எனவும், கூன்பாண்டியன் எனவும் புராண நூல்கள் குறிக்கும். சைவ சமய குரவருள் ஒருவராகிய சுந்தரர், இவனை,

*'நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற*
*நின்றசீர் நெடுமாறன்'*

என்று பாராட்டியுள்ளார்.

### கூன்பாண்டியன் அமைச்சர் குலச்சிறையார்

இத்தகைய பாண்டிய மன்னனுக்கு மதியமைச்சராக விளங்கியவரே குலச்சிறையார் என்பவர். சைவம் காத்த தெய்வ நங்கையாராகிய மங்கையர்க்கரசியாரைத் தன் பெருந்தேவியாகப் பெறும் பேறுபெற்ற மன்னனாகிய மாறனுக்குக் கண்ணென விளங்கிய கலைவல்ல அமைச்சர் குலச்சிறையார் ஆவர். குடிச்சிறப்பும் குணப் பெருக்கும் நுண்ணறிவும் நூலறிவும் பணிவும் கனிவும் துணிவுமாய பண்பெல்லாம் ஒருங்கமைந்த நல்லமைச்சர் அருந்துணையால் மாறன் நாட்டை நன்கு புரந்து வந்தான். அந்நாளில் வடநாட்டிலிருந்து எண்ணுயிரம் சமணர் தென்னுடு புகுந்தனர். அவர்கள் அனைவரும் மதுரைமாநகரை அடைந்து பாண்டிய மன்னனைச் சரண் புகுந்தனர். அவர்களையெல்லாம் பாண்டியன் தன் நகரைச் சூழ்ந்துள்ள

ஆனைமலை முதலான பலமலைகளில் வாழுமாறு செய்தான். அவர்கட்கு வேண்டுவன வெல்லாம் விரும்பியுதவினன்.

### பாண்டி நாட்டில் சமணம் பரவுதல்

மாறன் துணையால் மதுரையைச் சூழ்ந்து வாழ்ந்த சமணர்கள் தங்கள் சமயத்தைப் பாண்டிய நாட்டில் பரப்பத் தொடங்கினர். சின்னாளில் மன்னனும் சமணனாயினன். அன்று முதல் நாட்டில் சமணம் காட்டுத் தீப்போல் பரவத் தொடங்கியது. "மன்னன் எவ்வழி, குடிகள் அவ்வழி" என்பது பழமொழியன்றோ! மக்கள் எல்லோரும் பரசமயம் புகலாயினர். மதுரைமா நகர் வீதியெல்லாம் பாயும் பீலியும் தாங்கிய பாவிகள் நடமாடினர். நகரெங்கணும் பாழிகளும் சமணர் பள்ளிகளும் தோன்றத் தொடங்கின. அங்கயற்கண்ணியுடன் சிவபிரான் அமர்ந்தருளும் ஆலவாய்த் திருக்கோவிலுக்குச் சென்று வழிபடுவார் சிலராயினர். திருநீறு புனைந்த சிவனடியாரைக் காண்டல் அரிதாயிற்று.

### அமைச்சரின் கவலை

தமிழகத்தின் தொன்மை வாய்ந்த உண்மைச் சமயமாகிய சைவம், பாண்டிய நாட்டில் நாளுக்குநாள் நலிந்து வருதலைக் கண்ட குலச்சிறையார் உள்ளம் குலைந்தார். அவர் சிவனடி மறவாத சிந்தையர்; சிவனடியாரைப் போற்றிப் பரவும் புண்ணியர்; மேனியெல்லாம் வெண்ணீறு புனைந்து மகிழும் நன்னீர்மையர். இத்தன்மையராகிய அமைச்சருக்கு அரசன் போக்கும் நோக்கும் அளவற்ற கவலையைத் தந்தன. மன்னன் பெருந்தேவியாராகிய மங்கையர்க்கரசியாரும்

சிவம் பேணும் தவமுடையாராதலின் மன்னன் மாற்றங் கண்டு மனம் கவன்ருர். அரசியாரும் அமைச்சரும் நாட்டில் பரசமயம் பரவும் நிலையை மாற்றுதற்கு யாது செய்வதெனச் சூழ்ந்தனர். மன்னனிடம் தனித் தனியே சென்று இன்னுரைகள் பல இயம்பினர். இருவர் செய்த பெருமுயற்சியாலும் சிறுபயனும் விளையவில்லை.

சம்பந்தர் சிறப்புணர்தல்

அந்நாளில் சீர்காழியில் தோன்றிய திருவருட் செல்வராகிய திருஞான சம்பந்தர் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளியுள்ள நற்செய்தியைச் சிவனடியார் சிலர் வந்தியம்பக் கேட்டனர். அப்பெருமான் திருமறைக் காட்டில் வேதத்தால் பண்டு அடைக்கப்பெற்ற திருக் கோவில் பெருங்கதவங்களை அப்பரடிகளின் ஒப்பிலாத் துணையுடன் திறக்கவும் அடைக்கவும் செய்த அற்புத நிகழ்ச்சியைப் பற்றியும் சொல்லக் கேட்டனர். அவர் வேதநெறி தழைத்தோங்கவும் மிகுசைவத்துறை விளங் கவும் பூத பரம்பரை பொலியவும் பெற்ருேர் செய்த பெருந்தவத்தால் அவதரித்தருளிய ஞானச் செல்வர் என்பதை முன்பே குலச்சிறையார் அறிந்தவர். ஆதலின் அப்பெருமானை மதுரைமா நகருக்கு எழுந் தருளுமாறு செய்து, சைவத்தின் தெய்வமாண்பை நிலை நாட்ட வேண்டும் என்று நினைந்தார். அம்முறையில் பாண்டியன் மனத்தையும் மாற்ற வேண்டும் என்று மனங்கொண்டார்.

அரசியாருக்கு அறிவுறுத்தல்

இவ்வாறு உளங்கொண்ட குலச்சிறையார் தம் கருத்தை அரசியாருக்கு அறிவித்தனர். கணவன்

நிலையும் நாட்டின் கேடும் கண்டு கவன்று கொண்டிருந்த அரசியார் இதுவே தக்க சமயம் என்று துணிந்தார். திருஞானசம்பந்தர் மதுரைக்கு எழுந்தருளினால் நாட்டில் பரவிய சமணிருள் அகலும், சைவப் பேரொளி நிலவும் என்று நம்பினார். உடனே அப்பெருமானைத் திருமறைக்காட்டில் சென்று கண்டு செய்தி கூறி அழைத்து வருமாறு ஆளனுப்பக் குலச்சிறையாருக்கு ஆணையிட்டார்.

திருமறைக் காட்டில் ஏவலாளர்

அரசியாரின் ஆணையைச் சிரமேல் தாங்கிய குலச்சிறையார், திருஞான சம்பந்தரை அழைத்து வருமாறு திருமறைக்காட்டிற்கு ஏவலாளர் சிலரை அனுப்பினார். அவர்களும் திருமறைக்காட்டை யடைந்து பாண்டிமா தேவியாரும் பைந்தமிழ் அமைச்சராகிய குலச்சிறையாரும் கூறியனுப்பிய செய்தியைப் பணிவுடன் மொழிந்தனர். பாண்டிநாட்டில் சைவப் பேரொளி பெருகுமாறு தேவரீர் எழுந்தருள வேண்டும் என்று பணிவுடன் வேண்டி நின்றனர். அவர்கள் வேண்டுகோளை நிறைவேற்றத் திருஞான சம்பந்தர் திருவுளம் பற்றினார். உடனே தமது கருத்தினை உடனிருந்த திருநாவுக்கரசரிடம் தெரிவித்தார்.

திருநாவுக்கரசர் சம்பந்தரைத் தடுத்தல்

அதுகேட்ட திருநாவுக்கரசர் திடுக்கிட்டார். ‘அந்தோ! கொல்லாமை மறைந்தொழுகும் பொல்லாத சமணர்கள் எதற்கும் அஞ்சாத கன்னெஞ்சம் படைத்த வஞ்சகரன்றோ! இளம் பிள்ளையாராகிய திருஞானசம்பந்தர் அவண் சென்றால் அவருக்கு யாது நேருமோ?’

என்று நெஞ்சம் பதைத்தனர். 'பெருமானே! நீவிர் இப்பொழுது மதுரைமா நகருக்கு எழுந்தருளல் இனியதன்று; நாளும் கோளும் நல்லனவாக இல்லை' என்று அன்புடன் சொல்லி அவர் செலவைத் தடுத்தனர்.

சம்பந்தர் மதுரைக்கு எழுதல்

திருநாவுக்கரசரின் அன்பு மொழிகளைக் கேட்டுப் புன்முறுவல் பூத்த சீர்காழிச்செல்வர், "சிவனார் சேவடி பணியும் நம்மை நாளும் கோளும் நலிய முடியுமோ? எல்லாம் நல்லவாகவே அமையும்," என்று கூறிக் கோளறுபதிகம் பாடியருளினார். பின்னர்த் திருநாவுக்கரசர்பால் விடைபெற்றுத் திருமறைக்காட்டு இறைவனைப் பணிந்து முத்துச் சிவிகையில் ஏறி மதுரைக்குப் புறப்பட்டார். இடையில் உள்ள தலங்கள் பலவற்றையும் தரிசித்துக் கொண்டே மதுரைமா நகரை அணுகினார்.

சமணர் திகைப்பும் சம்பந்தர் வரவும்

அந்நாளில் மதுரையைச் சூழ்ந்த மலைகளில் வாழ்ந்து வந்த சமணர்கள் தீக்கனவும் தீக்குறியும் கண்டு திகைத்தனர். மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மங்கலக் கனக்களும் மகிழ்வூட்டும் நன்னிமித்தங்களும் கண்டு உவகை கொண்டனர். திருஞான சம்பந்தர் மதுரை நகரத்தின் எல்லையை வந்தடைந்த நற்செய்தியை ஏவலாளர் முன்பே விரைந்து வந்து குலச்சிறையாருக்கு அறிவித்தனர். அது கேட்டு மகிழ்வுற்ற அமைச்சர், அரசியாருக்கு அந் நற்செய்தியினை அறிவித்தார். அவரும் பெருமகிழ்வுற்றுத் திருஞான சம்பந்தரை நகரெல்லையில் எதிர்கொண்டு வணங்கி அழைத்துவருமாறு பணித்தார்.

குலச்சிறையார் எதிர்கொள்ளல்

அவ்வாறே நகரின் எல்லையை நண்ணிய அமைச்சர், திருஞானசம்பந்தர் அடியார் திருக்கூட்டம் புடைசூழவும், சிவநாம முழக்கம் வானைப் பிளக்கவும் சிவிகையில் எழுந்தருளும் அரிய காட்சியைக் கண்குளிரக் கண்டு எதிரே விழுந்து வணங்கினார். படிமிசை விழுந்து பணிந்த மதியமைச்சர் எழாதிருத்தலைக் கண்ட அடியவர்கள் சம்பந்தப் பெருமானைச் சார்ந்து செய்தியைச் சாற்றினர். உடனே அவர் அகமும் முகமும் மலர்ந்தவராய்ச் சிவிகையிலிருந்து விரைந்து கீழிறங்கினார். நிலமிசைத் தொழுது கிடக்கும் அமைச்சர் பக்கம் அடைந்து அவரைத் தம் சிறு மலர்க்கரங்களால் பற்றித் தூக்கலானார். அப்பொழுதே எழுந்து கைகூப்பித் தொழுது நின்ற அமைச்சருக்குச் சம்பந்தர் அருட்பார்வை நல்கினார்.

சம்பந்தர் நலம் உசாவுதல்

பின்பு, சம்பந்தர் அமைச்சராகிய குலச்சிறையாரை நோக்கிச், "சோழர் பெருமான் குலமகளாராகிய மங்கையர்க்கரசியாருக்கும் திருந்திய சிந்தைப் பெருந்தகவுடையீராகிய நுமக்கும் நம்பெருமான் திருவருளுக்குக் குறைவில்லையன்றே?" என்று அருளுடன் நலம் உசாவினார். உடனே குலச்சிறையார் மீண்டும் அவர் திருவடியில் விழுந்து வணங்கி மறுமொழி பகர்ந்தார்.'

அமைச்சர் மறுமொழி

"எங்கள் பெருந்தவத்தின் பயனாய் எழுந்தருளிய பெம்மானே! அடியேங்கள் சென்ற காலத்தில் செய்த

தவத்தால் இன்று தாங்கள் எழுந்தருளினீர்கள். நிகழ் காலத்தில் தங்கள் மங்கள வருகையால் எதிர்காலம் இனிதமையும் பேறு பெற்றோம். ஆகவே எந்நாளும் இறைவன் திருவருளுக்குக் குறைவில்லை. இனி இந் நாடும் மன்னனும் உய்தி பெற்று எங்கும் வெண்ணீற் றொளி பொங்கும். அதனால் யாங்கள் பெறற்கரிய மேன் மையைப் பெற்றோம்,'' என்று குலச்சிறையார் உளங் குளிர்ந்து மொழிந்தார். சிவஞானச் செல்வராகிய சம்பந்தரை அன்புடன் வரவேற்கும் அமைச்சரின் பொருள் நிறைந்த வாசகம் அவரது நாநலத்தை நன்கு விளக்குவதாகும்.

*'' சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும்*
*இனிஎதிர் காலத்தின் சிறப்பும்*
*இன்றெழுந் தருளப் பெற்றபே(று) இதனால்*
*எற்றைக்கும் திருவருள் உடையேம்;*
*நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்*
*நற்றமிழ் வேந்தனும் உய்ந்து*
*வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும்*
*மேன்மையும் படைத்தனம் '' என்பார்.*

இவ்வாறு சம்பந்தருக்கு இன்மொழி பகர்ந்த அமைச்சர், மேலும் '' பெருமானே ! தாங்கள் இங்கு எழுந்தருளும் பெருமையைக் கேட்டு, மங்கையர்க்கரசி யார் பெறுதற்கரிய பேறு பெற்றாலெனப் பெருமகிழ் வுற்றார் ; நம் பெருவாழ்வே எழுந்தருளியது ; அவரை எதிர்கொண்டு அடிபணிந்து அழைத்து வருவீர் என்று என்னைப் பணித்தருளினார்,'' எனக்கூறித் தொழுதனர்.

ஆலவாய்க் காட்சி

திருஞானசம்பந்தர்! அவருக்கு அருள்செய்து நிற் கும் அச்சமயத்தில் மதில் சூழ்ந்த மதுரைமா நகரம்

சேய்மையில் தெரிந்தது. உடனே சம்பந்தர் அங்கு நின்ற தொண்டரை நோக்கிக், "கண்ணுதற் பெருமான் அமர்ந்தருளும் புண்ணியத் திருஆலவாய் எம்மருங்குள்ளது?" என்று வினவினார். அதுகேட்ட அடியவர் ஒருவர், "அதோ! நறுமலர்ச் சோலைகள் சூழ நடுவண் வானளாவிய கோபுரத்துடன் குலவும் திருக்கோவிலே திருவாலவாயாகும்," என்று வணங்கிக் கூறினார்.

### சம்பந்தர் பாராட்டு

அங்கு நின்றே கோபுரக் காட்சியைக் கண்டருளிய சம்பந்தர் மண்டுபேரன்பால் மலர்க்கரம் குவித்து மண்மிசை விழுந்து பணிந்தார். 'மங்கையர்க்கரசி' என்று தொடங்கும் இன்னருட் பதிகம் பாடிப் பரவினார். அப்பதிகத்தில் மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகிய இருவருடைய தவப்பணியையும் சிவப்பணியையும் பாராட்டி உளங்கனிந்து உருகிப் பாடினார். எங்கும் சமணிருள் பெருகவும் மதுரைத் திருநகரில் இவ்விருவர் மட்டும் சிவனருள் எண்ணித் திகழ்ந்தனர் என்பதை அறிந்து மகிழ்ந்த பிள்ளையார் அப்பதிகத்தில் இவ்விருவரையுமே மாறிமாறிப் புகழ்வாராயினர்.

### குலச்சிறையார் நலங்கள்

'அமைச்சராகிய குலச்சிறையார் சிவனடியாரைக் கண்டால் யாதொரு பயனையும் நோக்காது அவர்தம் அடியினில் வீழும் விருப்புடையார். அவர் தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியுடையார். நாட்டில் நலம்பல தழைக்க நற்றவம் புரியும் பெற்றியர். நுணங்கிய கேள்வியும் வணங்கிய வாயும் உடைய வாய்மை

யாளர். அஞ்செழுத்தோதும் அரிய நாவினை உடையார். தொண்டர்கள் இறைவன் அருட்குணங்களைக் கூறிக் குலாவுதலைக் கண்டு நாள்தோறும் இன்புறுகின்ற இயல்பினர்.' இவ்வாறு ஐந்து பாசுரங்களில் குலச்சிறையார் தவப்பணியைச் சம்பந்தர் கூறியருளுகின்றார்.

ஆலவாய் வழிபாடும் அரசியார் வருகையும்

இங்ஙனம் திருஞானசம்பந்தரால் பாராட்டப் பெற்ற அமைச்சராகிய குலச்சிறையார் அப்பெருமானை அழைத்துக் கொண்டு ஆலவாய்த் திருக்கோவிலை அடைந்தார். ஆங்கு எழுந்தருளிய ஆலவாய் அண்ணலைக் கண்டு கண்களித்து மண்மிசை வீழ்ந்து வணங்கினார். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க நின்று வழிபட்டுப் பதிகம் பாடித் துதித்தார். பின் அங்கயற்கண்ணியாரைப் பணிந்து திருவாயிலை அடைந்தார்.

ஞானசம்பந்தரை எதிர்கொண்டு அழைத்து வருமாறு அமைச்சரைப் பணித்தனுப்பிய பாண்டிமாதேவியார் திருக்கோவில் வழிபாட்டிற்குச் செல்வதாக அரசன்பால் விடைபெற்று ஆலவாய்க் கோவிலை அடைந்து திருவாயிலின் ஒருபால் நின்றுகொண்டிருந்தனர். ஞானசம்பந்தர் திருவாயிலை அடைந்த பொழுது, அங்குத் தலைமேல் குவித்த கரங்களுடன் வணங்கி நிற்கும் மங்கையர்க்கரசியாரைக் குலச்சிறையார் அவருக்குக் காட்டினார். அவரைக் கண்டு சம்பந்தர் எதிர் செல்ல அரசியாரும் விரைந்து எதிர்வந்து அவர்தம் மலரடியில் விழுந்து வணங்கினார். சம்பந்தர் அவரைத் தம் திருக்கரத்தால் எடுத்தருளினார். அப்பொழுது அரசியார் தம் கருத்து முற்றியதென மதித்து, மகிழ்ச்சிப்

பெருக்கால் கண்கள் நீர் சொரியவும் பவளவாய் குழற வும் 'யானும் என் கணவரும் செய்த தவத்தை என் னென்பேன்!' என்று கூறி மீண்டும் வணங்கினார்.

அரசியாரின் சிவப்பற்றையும் அன்பு வெள்ளம் பெருகும் சிந்தையையும் கண்ட காழிவள்ளல், "சுற்றி லும் பரசமயம் சூழ்ந்திருக்கவும் சிவத்தொண்டு செய்து நிற்கும் தங்களைக் காணவே இங்கு வந்தோம்," என்று அன்புரை வழங்கினார். இங்ஙனம் பாராட்டி அரசியா ருக்கு விடைகொடுத்தனுப்பிய பின்னர், ஆலவாயில் தொண்டு புரியும் அடியவரெல்லாம் பிள்ளையாரை வணங்கி, "இந்நாட்டில் பரவும் சமணிருள் கெடு மாறு தாங்கள் வந்தருள யாங்கள் பெருந்தவம் செய் தோம்," என்று பேசினர்.

அமைச்சர் விருந்தூட்டல்

இக்காட்சிகளையெல்லாம் கண்டு களிப்புற்றுக் கொண்டிருந்த அமைச்சர், ஞானசம்பந்தர் தங்குதற் கெனக் குறித்த திருமடத்தைக் காட்டி அங்கு உறையு மாறு செய்தார். அரசியாரின் அருளால் சம்பந்தப் பெருமானுக்கும் அவரைச் சார்ந்த அடியார்கட்கும் குலச்சிறையார் சிறந்த முறையில் விருந்தூட்டினார்.

திருமடத்தில் சமணர் தீக்கொளுவுதல்

திருஞானசம்பந்தருடைய வருகையைக் கண்ட சமண் குண்டர்கள் அனைவரும் இரவில் ஒருங்கு திரண் டனர். பாண்டியனிடம் சென்று பதைபதைப்புடன் தம் சமயத்திற்கு வந்த கேட்டை விளக்கினர். அவ னுடன் சூழ்ந்து சம்பந்தர் தங்கிய திருமடத்தில் தீக் கொளுவத் தலைப்பட்டனர். அவர்கள் மந்திர வலியால்

மடத்தில் வெந்தழல் பற்றவில்லை. உடனே அரசன் இச்செய்தி அறியின் நம்மை இகழ்வான் என்று எண்ணித் துணியில் பொதிந்த கனலைத் திருமடத்தின் புறத்தே இட்டு வந்தனர். அத் தீச் சிறிதே மடத்தில் பற்றத் தொடங்கியதும் விழித்தெழுந்த அடியவர்கள் அதனைச் சிதைத்து அணைத்தனர். அச் செய்தியைச் சம்பந்தரிடம் சென்று அறிவித்தனர்.

### சம்பந்தர் தீயைப் பணித்தல்

அஃதுணர்ந்த சம்பந்தர், 'என் பொருட்டு இச் சமணர்கள் தீங்கு செய்தாராயினும் அடியவர்க்கு அல்லல் விளைந்ததே! இங்கு அரசனது ஆட்சி நெறி தவறிவிட்டது. இத் தீங்கு விளைதற்கு வேந்தனும் இசைந்தே உள்ளான்; இதனை அவன் உணருமாறு செய்யவேண்டும்' என்று மனத்துள் கொண்டருளினார். உடனே 'சைவர் வாழ் மடத்தில் இச் சமணர்கள் இட்ட தீப் பையவே சென்று பாண்டியற்கு ஆவதாக!', என்று நிறைமொழி யருளினார். அதனால் பாண்டியன் வெப்பு நோய் கண்டு வெந்துயருற்றான். அவன் வேதனை தாங்காது வெதும்புவது அறிந்து அரசி யாரும் அமைச்சரும் சென்று கண்டனர். சமண அடிகள்மாரெல்லாம் அரசனது நோய் தீர்க்க அரும் பாடு பட்டனர். அவர் தம் செயலெல்லாம் அவனது நோய்த் துன்பத்தை மேன்மேலும் பெருக்கின.

### அமைச்சர் அறிவுரை

இந் நிலையைக் கண்ட குலச்சிறையார், "சமணர் கள், சம்பந்தப்பெருமான் உறையும் திருமடத்தில் வைத்த தீயினாலேயே தங்களுக்கு இந்த வெப்பு நோய்

விளைந்துள்ளது; அதனால்தான் அவர்கள் செய்யும் சிகிச்சையால் நோய் தணியாது பெருகுகின்றது; ஆதலின் அச் சம்பந்தரே இங்கு வந்தால்தான் தங்கள் நோய் தீரும்,'' என்று அரசனுக்கு எடுத்துரைத்தார். அரசியாரும் அக் கருத்தை வலியுறுத்தினர். இருவர் தம் உரையினையும் கேட்ட பாண்டியன் சம்பந்தரை அழைத்து வருதற்கு இசைந்தான்.

### திருமடத்தில் சம்பந்தர் காட்சி

அரசன் இசைவைப் பெற்ற அமைச்சர் குதிரை யேறித் திருமடத்தை நோக்கிப் புறப்படலானர். அரசி யாரும் சிவிகையேறிச் சம்பந்தர் தங்கிய திருமடத்தைச் சார்ந்தார். இருவரும் ஆங்குச் சென்று ஞானமே வடிவாய் விளங்கிய சம்பந்தப் பெருமானைக் கண் களிப்பத் தரிசித்தனர். அப்பெருமானுக்குச் சமண் கொடியோர் இழைத்த தீங்கினை எண்ணி இனைந்து கண்ணீர் சொரிந்தனர். அவர் திருவடியில் விழுந்து பணிந்தனர். அவர்கள் இருவரையும் சம்பந்தர் தம் திருக்கரத்தால் எடுத்தருளித் தேற்றினர். 'திரு வுடையீர்! உங்களுக்குத் தீங்கு ஏதும் விளைந்ததோ?' என்று வினவினர்.

அது கேட்ட அமைச்சர், "பெருமானே! தங்கட்கு வெஞ்சமணர் முன் செய்த வஞ்சனைச் செயல் கேட்டு அஞ்சி வருந்தினோம். திருவருளால் தங்கள் திருமேனிக்குத் தீங்கு நேராதெனத் தெளிந்தோம். அவ் வஞ்சகர் செய்த தீத்தொழில் எங்கள் மன்னவனுக்கு வெப்பு நோயாய் வந்து மூண்டது. அச்சமணர்களின் மருந்தாலும் மந்திரத்தாலும் அந்நோய் தீராது. இன்ன லுறும் மன்னவன் முன்னல் அவரைத் தாங்கள் வென்

றருளினால் எம் உயிரும் அவன் உயிரும் உய்யும்," என்று உரைத்தார்.

சம்பந்தர் திருவருள் துணை நாடுதல்

குலச்சிறையார் கூறிய செய்தியைக் கேட்டருளிய ஞானசம்பந்தர், 'ஆவதும் அழிவும் எல்லாம் அரன் செயலே' என்று கூறி, ஆலவாய்த் திருக்கோவிலை அடைந்து சோமசுந்தரப் பெருமான் திருவருளை வேண்டி நின்றார். அப் பெருமானை வழிபட்டு, வாது செய்யத் திருவுள்ளமே? என்று வினவி,

*'ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்*
*ஆல வாயில் உறையும்எம் ஆதியே.'*

என்று பதிகம் பாடித் திருவருள் பெற்று மன்னன் மாளிகையை நோக்கிப் புறப்பட்டார்.

பாண்டியன் மாளிகையில் சம்பந்தர்

சம்பந்தர் வருகையை உணர்ந்த பாண்டியன் அவருக்குத் தன் தலைப்பக்கத்தே பொற்பீடம் அமைக்கு மாறு பணித்தான். அமைச்சரை எதிர்கொண்டு அழைத்து வருமாறு ஏவினான். அது கண்ட அமைச் சரும் அரசியாரும் அளவிலா மகிழ்வுற்றனர். அங் கிருந்த சமணர்கள் ஆத்திரம் கொண்டனர்; நம் சமயத்தை நாட்டும் முறைமை இதுதானோ என்று மன்னனைக் கேட்டு மனம் கலங்கினர்.

இச் சமயத்தில் தமிழ்நாடு செய்த தவக் கொழுந் தனைய சிவஞானச் செல்வர், குலச்சிறையார் முன் வர முத்துச்சிவிகையினின்று இறங்கிப் பாண்டியன் மாளிகையுள் புகுந்தார். காரிருள் நீங்கப் பேரொளி யுடன் வரும் கலைத்திங்களைப்போல் எழுந்தருளிய

ஞானசம்பந்தரைப் பாண்டியன் கண்ட அப்பொழுதே தன் நோய்த் துன்பத்தையும் நோக்காது கைதூக்கிப் பொற்பீடத்தைக் காட்டி அமருமாறு வேண்டினன். பின்னர், மன்னன் இசைவுடன் அவனது வெப்பு நோயை அகற்ற இருதிறத்தாரும் முயன்றனர். ஞான சம்பந்தர் வலப்பக்கத்து நோயைத் தீர்க்கலுற்ருர். சமணர்கள் அவனது இடப்பக்கத்து நோயை அகற்ற லுற்றனர்.

வேந்தன் வெப்புநோய் தீர்த்தல்

திருஞானசம்பந்தர் ஆலவாயண்ணல் திருநீறே மருந்தும் மந்திரமுமாகும் என்று திருவருளைச் சிந்தித்துத் திருநீற்றுப் பதிகம் பாடியவராய்த் தம் திருக் கரத்தால் தென்னவன் வலப்பால் உடம்பைத் திருவளர் நீறு கொண்டு தடவினர். அப்பொழுதே அவன் உடம்பின் வலப்பாகம் வெப்பு நோய் நீங்கிக் குளிர்ச்சி யுற்றது. ஆனல் இடப்பாகம் இருபுடை வெப்பும் கூடி வெந்தீப்போல் வேந்தனை வெதுப்பியது. அவனது உடம்பின் ஒருபால் வெம்மையும் மற்ருெருபால் தண் மையும் ஒதுங்கினல் போன்றிருந்தது. இடப்பால் உற்ற இடரைப் பொறுக்க முடியாத மன்னன், "என்ன வியப்பு! ஒரே காலத்தில் நரகத் துன்பத்தையும் வீட்டின்பத்தையும் காணுகின்றேனே! ஒரே சமயத்தில் கொடிய நஞ்சை உண்பது போன்றும் அரிய அமுதைப் பருகுவது போன்றும் இருக்கின்றதே!" என்று சினத் துடன் கூறினன். சமணர்களை நோக்கி, "நீவிர் தோற்றீர்!, என்னை விட்டு அகன்ருெழியுங்கள்" என்று கடிந்துரைத்தான். 'இடப்பால் வெப்பும் நீங்க இன்னருள் புரிவீர்!' என்று சம்பந்தரைச் சிந்தையால்

தொழுது செப்பினுன். பாண்டியன் வேண்டுகோளை ஏற்றருளிய சம்பந்தர் அருளுடன் நோக்கி மீண்டும் தமது திருக்கரத்தால் திருநீற்றை எடுத்து அவனது இடப்பாகத்தில் தடவினுர். உடனே பாண்டியன் இருபால் நோயும் நீங்கி இன்புற்ருன்.

அது கண்ட அரசியாரும் அமைச்சரும் சம்பந்தர் திருவடி பணிந்து, "யாங்கள் பெருமையுற்ருேம்; பிறந்ததன் பயனையும் பெற்ருேம்; எங்கள் மன்னன் பிறவாத பெருநெறியை உற்ருன்," என்று உவகை பொங்க உரைத்து இன்புற்றனர். வெப்பு நோய் நீங்கிய வேந்தனும் இன்புற்று உச்சிமேல் கரங்குவித்துச் சம்பந்தரை உளங்குளிர வணங்கினுன்.

அனல் வாதமும் புனல் வாதமும்

பின்னர்ச் சமணர்கள், "நம் சமய உண்மைகள் எழுதிய ஏடுகளை நெருப்பிலும் நீரிலும் இட்டு ஒட்டுவோம்," என்றனர். முதற்கண் அனல் வாதம் நிகழ்ந்தது. அதில் சம்பந்தரே வென்ருர். பின்பு புனல் வாதம் தொடங்கினர். அப்பொழுது குலச்சிறையார் குறுக்கிட்டுச் சமணரை நோக்கி, "இம்முறையும் நீவிர் தோற்ருல் என்செய்வது?" என்று வினவினுர். சமணர்கள் பொருமையும் சினமும் பொங்கியவராய் வாய் சோர்ந்து, "இவ்வாதில் அழிவோமாகில் வேந்தனே எம்மை வெங்கழு ஏற்றுவான்," என்று வீறுடன் கூறினர். வைகையாற்று வெள்ளத்தில் இருதிறத்தார் ஏடுகளும் விடப்பெற்றன. சமணர் விட்ட ஏடு அவர்களை நட்டாற்றில் விட்டுக் கடலிடம் போய்ச் சேர்ந்தது. சம்பந்தர் ஏடோ வெள்ளத்தை எதிர்த்து வேகமாகச் சென்றுகொண்டிருந்தது. உலகினர்க்கு

இதுவே உண்மைப் பொருள் என்று காட்டிப் பிறவி யாற்றில் செல்லும் பெருந்தவர் உள்ளம்போல விரைந்து எதிர்ந்து சென்றது. அதனைக் கண்ணுற்ற அமைச்சராகிய குலச்சிறையார் காற்றெனக் கடிது செல்லும் கடும்பரி ஒன்றில் ஏறி விரைந்தார். அவ் ஏட்டினை அமைச்சர் பற்றித் தாங்கி வருமாறு இறைவன் தண்ணருள் வேண்டிச் சம்பந்தர் புண்ணியப் பதிகம் பாடியருளினர்.

அரசன் உடற்கூன் ஒழிதல்

சம்பந்தர் வைகையில் இட்ட ஏட்டில் எழுதியருளிய பாட்டில் 'வேந்தனும் ஓங்குக!' என்று வாழ்த்தினராதலின் 'திடீரெனப் பாண்டியன் உடற்கூன் மறைந்தது. அவன் நின்றசீர் நெடுமாறனைக் காட்சியளித்தான். இங்ஙனம் மன்னன் அறிவுக் கூனை அகற்றிய தோடன்றி ஞானசம்பந்தர் திருவருளின் துணையால் உடற் கூனும் மறையுமாறு செய்த மதியமைச்சர் குலச் சிறையாரின் கூர்த்த மதிவன்மையை என்னென்பது! பரசமயம் புகுந்த மன்னனைப் பக்குவமாகத் தக்க சமயத்தில் அறிவுறுத்தி, அவனையும் பாண்டி நாட்டையும் நன்னெறிச் செலுத்திய அன்னவரின் நுண்ணறிவை ஞானசம்பந்தரே வியந்து போற்றினரன்றே!

---

# அ. அமைச்சர் வாதவூரர்

### சமயகுரவர் நால்வர்

தமிழகத்தின் பழமையான சமயமாகிய சைவத்தை நிலைநாட்டிய தெய்வப் பெருமக்கள் நால்வர். அவர்களைச் சைவ சமய குரவர்கள் என்று சான்றோர் போற்றுவர். அந்நால்வருள் தேவாரம் பாடிய மூவர்க்கும் காலத்தால் முற்பட்டவர் மாணிக்க வாசகர். விலைமதிக்க முடியாத மணிகளைப் போன்ற அரிய இனிய சொற்களாலாகிய திருவாசகம் என்னும் அருள்நூலைத் தந்தருளியதனால் மாணிக்கவாசகர் எனப்பட்டனர்.

### வாதவூரர் வரலாறு கூறும் நூல்கள்

இவர் பிறந்த ஊர்பற்றி வாதவூரர் எனவும் படுவர். இவர் மதுரை மன்னனுக்கு மதியமைச்சராய் விளங்கியவர். இவரைத் தன் முதலமைச்சராய்க் கொண்டு அரசியல் நடாத்தும் அரும்பேறு பெற்றவன் அரிமர்த்தன பாண்டியன் என்பான். இவரது அருள் நிறைந்த வரலாற்றை அறிவிக்கும் தமிழ்நூல்கள் பல. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற் புராணம், திருவுத்தர கோசமங்கைப் புராணம், திருவாதவூரடிகள் புராணம் முதலிய பல நூல்களில் வாதவூரர் வரலாறு விரிவாகப் பேசப்படுகின்றது. எனினும் அவ்வரலாறு எல்லா நூல்களிலும் ஒரே வண்ணமாக உரைக்கப் பெறவில்லை; சிறுசிறு மாற்றத்துடனேயே காணப் பெறுகின்றது.

திருவாதவூரர் புராணச் சிறப்பு

வாதவூரர் வரலாற்றைக் கூறும் நூல்கள் பலவற்றிலும் கடவுண்மாமுனிவர் அருளிய திருவாத வூரடிகள் புராணம் ஒன்றுமட்டும் அவரது வரலாற்றையே விளக்குதற்கு எழுந்த சிறந்த செந்தமிழ் நூலாகும். இந்நூல் சிறியதொரு நூலாயினும் அரிய பல பண்புகள் கொண்டு இலகுவது. இஃது எளிய இனிய செய்யுள் நடையுடையது. காமச் சுவை கலவாத கற்பனை நலங்கள் கனிந்தொழுகும் பொற்புடையது. சிவஞான போதம், சிவஞானசித்தியார் போன்ற சித்தாந்த சாத்திரங்கட்கு இலக்கியமாக மிளிர்வது. திருக்கோயில்களிலும் திருமடங்களிலும் சிறந்த இல்லங்களிலும் ஆண்டு தோறும் மார்கழித் திங்கள் திருவாதிரைவிழாப் பத்து நாட்களிலும் முறையாக ஓதவும் கேட்கவும் பெறும் உயர்வுடையது. முதன் முதலாகச் செய்யுள் நடை பயில முற்படுவாருக்கு ஊக்கமூட்டும் சிறப்புடையது. ஆதலின் தமிழறிஞர்கள், தமிழ் இலக்கியங்களைப் பயில முயலும் இள மாணவர்க்கு இந்நூலையே முதற்கண் கற்குமாறு தூண்டும் முறைமை இன்றும் உண்டு.

வாதவூரர் புராணம் கூறும் வரலாறு

இத்தகைய பல்வேறு சிறப்புக்களையுடைய திருவாதவூரடிகள் புராணம் கூறும் வாதவூரர் வரலாற்றை நோக்குவோம். 'பாண்டி நாடே பழம்பதி யாகவும்' என்று மாணிக்கவாசகரே மகிழ்ந்து போற்றும் பழம் பதியாகிய பாண்டிய நாட்டை வளம்படுத்தும் ஆறுகளில் ஒன்று வையையாகும். 'புனல் யாறு அன்று இது, பூம்புனல் யாறு' என்று போற்றப்பெறும் ஏற்றமுடையது வையையாறு. இவ் வையையாற்றின்

வளமான தடங்கரையில் அமைந்தது வாதவூர். அது மாணிக்கவாசகர் அவதரித்தருளும் தவப்பேறுடைமையால் திருவாதவூர் என்று சிறப்பிக்கும் பெருமையுற்றது.

வாதவூரர் அவதாரம்

ஒருவாத புகழ் படைத்த திருவாதவூரில் சிவநெறி பிறழாச் சிந்தையாளராகிய அந்தணர் ஒருவருக்கு அரும் பெறல் மகவாய் அவதரித்தவர் வாதவூரர். இவரது அவதாரத்தைப் பற்றிக் கூறவந்த கடவுண் மாமுனிவர், 'பொய்யான உலகில் சூழும் அஞ்ஞான இருள் அகலுமாறும், அவ் இருளில் மூழ்கி ஆழ்நரகில் வீழும் பரசமயங்களாகிய விண்மீன்கள் ஒளிமழுங்கவும், சிவனடியார்களுடைய உள்ளத்தாமரைகள் எல்லாம் ஒளிபெற்று மலரவும் வாதவூரர் ஞானக்கதிரவனாய் ஞாலத்து உதித்தருளினார்' என்று உரைத்தருளினார்.

'பொய்ம்மையாம் உலகின் மாயப்
பொங்கிருள் அகல அன்னோர்
தம்மையாழ் நரகில் தள்ளும்
சமயதா ரகைம ழுங்க
எம்மையா ளுடையான் அன்பர்
இதயதா மரைகள் எல்லாம்
செம்மையாய் மலர ஞான
தினகரர் உதயம் செய்தார்.'

என்பது அம்முனிவர் அருளிய கவிதையாகும்.

வாதவூரர் கலையறிவும் அமைச்சுரிமையும்

ஞானக் கதிரவனாய் உதித்தருளிய வாதவூரர் இளம் பருவத்திலேயே கருவி நூல்கள், அரசியல் நூல்கள், சமய நூல்கள் முதலியவற்றை ஐயந்திரிபறக் கற்றுத் தெளிந்த அறிவுடையரானார். பதினாறு ஆண்டிற்குள்

பார்வாய்க் கலைகள் அத்தனையும் கற்றுணர்ந்தார். உற்றது கொண்டு மேல்வந்து உறுபொருள் உணரும் பெற்றியராஞர். இவர்தம் நூலறிவும் நுண்ணறிவும் சீலமும் கோலமும் செயலாற்றும் திறனும் ஆகிய சிறப்பையெல்லாம் அந்நாளில் பாண்டிய நாட்டை யாண்ட மன்னன் அரிமர்த்தனன் என்பான் நல்லார் பலர் வந்து சொல்லக் கேட்டான். உடனே அவரை அழைத்து வருமாறு பணித்து, அமைச்சுரிமை பூணுமாறு செய்தான். அவருடைய ஆட்சித் திறனும் சூழ்ச்சியுரனும் கண்ட மன்னன் அவரை முதலமைச்சராக்கித் 'தென்னவன் பிரமராயன்' என்ற பட்டமும் அளித்துப் பாராட்டிஞன். வாதவூரரது கோதிலா ஆட்சியின் கொற்றத்தால் பாண்டி நாட்டு அரசியல் அல்லல் இன்றி அமைதியாக நடைபெற்றது.

வாதவூரர் அமைச்சுத்திறம்

அமைச்சராகிய வாதவூரர் அறம் செய்வார்க்குக் கவசமும் கண்ணும் போல் விளங்கிஞர். பகைவர்க்குத் துன்பமும் பணிவார்க்கு இன்பமும் விளைத்தார். வறியவர்க்குத் தாயாக விளங்கித் தண்ணளி செய்தார். அரசன் அரிமர்த்தனன் ஆணையைப் பூமியில் பொதுவற நடத்திஞர்.

> 'காதலித்(து) அறம்செய் வோர்க்குக்
> கவசமும் கண்ணு மாகி
> ஏதிலர்க்(கு) இடும்பை யாகி
> இறைஞ்சினர்க்(கு) இன்ப மாகி
> ஆதுலர்க்(கு) அன்னை யாகி
> அரனடிக்(கு) அன்பு மிக்கார்
> பூதலத்(து) இறைவன் ஆணை
> பொதுவற நடத்தும் நாளில்.'

இவ்வாறு வாதவூரர் அமைச்சுத் தொழிலை அழகுற நடத்திய திறத்தைக் கடவுண்மாமுனிவர் கவிதையொன்றால் குறிப்பிட்டார்.

ஞானாசிரிய நாட்டம்

பாண்டி நாட்டில் அமைதியான ஆட்சி நிலவுமாறு செய்த வாதவூரர் உலக வாழ்வும், வாழ்விற் கண்ட பெரும்போகமும் நிலையற்றன என்பதை அறிந்தார். அதனால்,

> 'கூத்தினர் தன்மை வேறு
> கோலம்வே ருகு மாப்போல்
> நீத்தனர் மனத்தின் முன்போல்
> நிகழ்த்தினர் வழுதி நீதி.'

என்று குறித்தார் ஆசிரியர். நாடகம் ஆடுவோரின் இயற்கையான தன்மை வேருகவும், அரங்கம் ஏறி ஆடுங்காலத்துக் கொள்ளும் கோலம் வேருகவும் அமைதல் போன்று அமைச்சராகிய வாதவூரரும் அரசியல் பணிகளில் ஈடுபடுங்காலத்து அமைச்சர்க்குரிய தோற்ற ஏற்றங்களில் குறைவின்றித் திகழ்வார். பிற சமயங்களில் துறவு பூண்ட சிவத்தொண்டராய்ப் பிறவி அறுதற்குரிய ஞானநெறியில் சிந்தையைச் செலுத்துவார். அதனால் நன்னெறி காட்டியருளும் திருவருட் குருவை நாடும் வேட்கை, அவருக்கு நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வந்தது.

குதிரைக் காவலர் கூறிய செய்தி

ஒரு நாள் அரிமர்த்தன பாண்டியன் அமைச்சர் புடைசூழ அத்தாணியில் அமர்ந்திருந்தான். அப்பொழுது குதிரைப் படைக் காவலர் அரசவைக்கு வந்து

மன்னனைப் பணிந்தனர். 'அரசே! நம் குதிரைப் படை குறைந்து விட்டது. இறந்தன போக, இந்நாள் உள்ளனவாகிய குதிரைகளில் பெரும்பாலன பிணியுற்றனவும் முதுமையுற்றனவுமாய் இருக்கின்றன. குதிரை கொள்ளுதற்குரிய சமயமும் இதுவே என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்,' என்று கூறி அகன்றனர்.

குதிரை வாங்கப் பணித்தல்

குதிரைக் காவலர் கூறிய செய்தியைக் கேட்ட பாண்டியன் முதலமைச்சராகிய வாதவூரரை, 'இப்பொழுதே சென்று குதிரைகள் வாங்கி வருக' என்று ஆணையிட்டான். வாதவூரரும் அவ்வாறே நிதிக் கருவூலத்தைத் திறந்து பெரும்பொருளை வாரிக் கொண்டு குதிரை வாங்குதற்குப் புறப்பட்டார்.

குருபரன் அருட்காட்சி

அவர் செல்லும் வழியில் திருப்பெருந் துறையினை அடைந்தார். அங்குச் சிவநாம முழக்கம் அவர் செவி வழியே புகுந்து சிந்தையை உருக்கிற்று. ஒலி வந்த வழி நோக்கி விரைந்து சென்றார். திருப்பெருந் துறைத் திருக்கோவில் சுற்றுவெளியில் குருந்த மரத் தடியில் குருவடிவாக எழுந்தருளிய பெருமானைக் கண்டார். பூத கணங்களே சீடர்களாகப் புடை சூழ்ந்திருக்க, ஆங்கு அமர்ந்திருந்த அருளாசிரியரைக் கண்ணுற்றார். அவரைக் கண்ட வாதவூரர் உள்ளம் காந்தம் கண்ட இரும்பைப் போல் அவர்பால் இழுப்புண்டது. அவரை அணுகிய வாதவூரர் அடியற்ற மரம்போல் அவர் கழலில் விழுந்து பணிந்தார். 'அடியேனை ஆட்கொண்

டருள வேண்டும்,' என்று உள்ளமும் ஊனும் உருக வும், கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சொரியவும், உடம்பு மயிர்க்கூச் செறியவும் வணங்கி நின்று வேண் டினர்.

### உபதேசம் பெறுதல்

அமைச்சராகிய வாதவூரரின் அதிதீவிர பக்குவ நிலையைக் கண்ட பெருமான் திருவருள் கூர்ந்து, கரத் தால் தீண்டியும் திருவடி சூட்டியும் சிவஞான போத நுண்பொருளைச் செவியில் தெளிவுறுத்தியருளினர். பின்னர், இருவினைப் பாசத்தால் மும்மலக் கற்களுடன் கட்டப் பெற்றுப் பிறவிக் கடலில் வீழ்ந்த மக்கள் பேரின் பக் கரையில் ஏறுதற்கு அருளும் அஞ்செழுத்தினை அனுபவ நிலையில் உபதேசித்து மறைந்தருளினர். குருபரன் திருவுள்ளக் குறிப்பின்படியே தாம் குதிரை வாங்குதற்குக் கொண்டு வந்த நிதியத்தையெல்லாம் சிவனடியார்க்கும் திருக்கோவிற் பணிக்குமாகச் செலவு செய்தார். இறைவன் அருளமுதைப் பருகியவாறே திருப்பெருந் துறையில் பன்னாள் தங்கிவிட்டார்.

### அரசன் செய்தி அறிதல்

பாண்டியன், குதிரை வாங்கச் சென்ற மதியமைச் சரைக் காணேமே என்று, செய்தி அறிந்து வருமாறு ஆட்களை அனுப்பினன். ஏவலாளர்கள் திருப்பெருந் துறை அடைந்து அமைச்சரது நிலையை நேரில் கண்டு சென்றனர். அரசன்பால் அவரது நிலையை விளக் கினர். அவன் மனத்தில் சினங்கொண்டு மதியமைச்ச ரைத் திரும்பி வருமாறு ஓலையனுப்பினன். அது கண்ட வாதவூரர் திருப்பெருந்துறைத் திருக்கோவிலுட்

புகுந்து ஆங்கு எழுந்தருளிய பெருமானிடம் முறையிட்டார். இறைவன் விலை மதிக்க முடியாத மாணிக்கம் ஒன்றைக் கையுறையாகத் தந்து, ஆவணி மூல நாளில் குதிரைகள் வரும் என்ற செய்தியைக் கூறி, அம்மணியினையும் அரசன்பால் அளிக்குமாறு ஆணையிட்டருளினார்.

வாதவூரருக்குச் சிறைத்தண்டனை

இறைவன் அருளாணை பெற்ற அமைச்சர் மதுரை மாநகர் அடைந்து மன்னனைக் கண்டு மணியை நல்கினார்; ஆவணி மூல நாளில் குதிரைகள் அனைத்தும் வந்து சேரும் என்று அறிவித்தார். அமைச்சரது மொழியைக் கேட்டு ஒருவாறு உளம் தேறிக் குதிரைகளை எதிர்நோக்கி இருந்தான் அரசன். ஒற்றர்கள் வாயிலாக அமைச்சர் கூறிய செய்தி பொய்யென்று உணர்ந்தான். உடனே வாதவூரரைச் சிறையில் இருத்திப் பலவாறு ஒறுத்தான். அவர் தம் செயலற்று எல்லாம் இறைவன் செயலாகக் கண்டு இறை நினைவிலேயே மூழ்கி யிருந்தார்.

நரி பரியாக்கல்

பின்னர், இறைவன் அவர் பொருட்டுக் காட்டிலுள்ள நரிகளையெல்லாம் பரிகளாக்கிப் பாண்டிய மன்னனிடம் ஒப்புவித்து மீண்டார். அன்றிரவே அப்பரிகள் எல்லாம் நரிகளாக மாறி, இலாயத்தில் நின்ற பிற குதிரைகளையும் கொன்று காட்டிற்கு ஓட்டம்பிடித்தன. இதனை அறிந்த பாண்டியன் மேலும் சினம் மூண்டவனாய் அமைச்சராகிய வாதவூரரை வையையாற்றுச் சுடுமணலில் நிறுத்துமாறு பணித்தான். தலை

யில் கல்லேற்றி அல்லற் படுத்தினன். வாதவூரர் அத் துன்பத்தையெல்லாம் பொறுத்தார். இறைவன் அச் செயலை வெறுத்தார். வாதவூரர் மாண்பினை வையம் அறியுமாறு செய்ய விரும்பினர். வையையாற்றில் வெள் ளம் பெருகி வருமாறு திருவுளம் பற்றினர். அவ் வெள்ளப் பெருக்கால் மதுரை அழியுமோ என்று எல் லோரும் அஞ்சினர். அரசன் வீட்டிற்கொருவராகச் சென்று கரையை அடைக்குமாறு கட்டளையிட்டான்.

வந்தியின் கூலியாளாக இறைவன் வருதல்

மதுரையில் வாழ்ந்த நரை மூதாட்டியாகிய வந்தி யின் பங்கை அடைப்பதற்கு ஆளில்லை. இறைவனே வந்தியின் கூலியாளாக வந்து அவள் தந்த பிட்டமுதை உண்டு கரையடைப்பார்போல நடித்து மரநிழலில் படுத்துறங்கினர். அது கண்டு சினங்கொண்ட மன் னன் கைப் பிரம்பால் கூலியாளாக வந்த இறைவன் முதுகில் அடித்தான். அவ் அடி சராசரப் பொருள்கள் அனைத்தின்மேலும் பட்டது. அப்பொழுதுதான் மன் னன் வாதவூரர் மாண்பினை அறிந்தான். அவரைப் பணிந்து மன்னித்தருள வேண்டினன். அவ்விடத் திலேயே வாதவூரர் அமைச்சியலைத் துறந்து வெளிப் போந்தார்.

வாதவூரர் தில்லை சேருதல்

அன்றுமுதல் வாதவூரர் திருப்பெருந்துறை, திருவுத்தரகோசமங்கை, திருவாரூர், திருவிடைமருதூர் முதலிய சிவத்தலங்களை வணங்கிப் பதிகங்கள் பாடிக் கொண்டே தில்லையை அடைந்தார். அங்கு நாள் தோறும் அம்பலக் கூத்தனை வழிபட்டுத் திருமடமொன் றில் எழுந்தருளியிருந்தார். அந்நாளில் புத்தர்கள்

சிலர் தில்லைவாழ் அந்தணர்களோடு வாதுக்கு வந்தனர். அவர்களை இறைவன் ஆணையின் வண்ணம் எதிர்த்து வாது செய்து வென்றார். அவர்களுடன் வந்திருந்த இலங்கை மன்னன் மகளாகிய ஊமைப் பெண்ணைப் பேசுவித்துச் சிவனருள் திறத்தை நிலை நிறுத்தினார்.

இறைவன் ஏடு எழுதல்

தில்லையில் வாதவூரர் வாழ்ந்து வருங்கால் ஒரு நாள் இறைவன் அவர்பால் அந்தண வடிவுடன் வந்து அவர் பாடிய திருவாசகத்தைச் சொல்லுமாறு வேண்டினார். அவ்வாறே வாதவூரரும் மனமுவந்து பாடிக் கொண்டிருக்க, அவர் பாடல்களையெல்லாம் தம் கரத்தாலேயே எழுத்தாணி பிடித்து ஏட்டில் எழுதியருளினார். பின்னர், இறைவனே திருக்கோவையார் என்னும் நூலையும் வாதவூரரைப் பாடுமாறு செய்து அந்நூல் பாடல்களையும் தாமே எழுதியருளினார். இங்ஙனம் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் எழுதியருளிய இறைவன் இறுதியில் தமது கைச்சாத்திட்டுத் திருவம்பலப்படியில் வைத்து மறைந்தருளினார்.

வாதவூரர் ஒளியில் கலத்தல்

மறுநாள் திருவனந்தலில் ஏட்டைக் கண்ட தில்லை வாழ் அந்தணர்கள் பெரிதும் வியந்து அதனை அவிழ்த்து நோக்கினர். அதில் திருச்சிற்றம்பலமுடையார் கைச்சாத்திருப்பதைக் கண்டு வாதவூரரை அணுகி நிகழ்ந்த உண்மையை உணர்ந்தனர். அந்நூல்களுக்குப் பொருள் விரிக்குமாறு அவரைப் பணிவுடன் வேண்டினர். வாதவூரர் அம்பலக்கூத்தன் திருமுன்பு சார்ந்து, அனைத்திற்கும் பொருள் அம்பல

வாணன் அடியிணையே என்று கூறி, ஆங்குத் தோன்றிய பேரொளியில் இரண்டறக் கலந்தார்.

### திருப்பெருந்துறைப் புராணத்தில் வாதவூரர்

திருப்பெருந்துறைப் புராணம் வாதவூரர் வரலாற்றை ஆறு படலங்களால் அறிவிக்கின்றது. இந்நூலில் வாதவூரரின் தந்தையார் சம்புபாதாசிருதர் என்றும், தாயார் சிவஞானவதியார் என்றும் கூறப்பெற்றுள்ளது. அவர்கள் இருவரும் பரசமயக் குறும்பொழிக்கும் ஒரு மகவு வேண்டுமெனத் தவங் கிடந்தனர் என்றும், அதன் பயனாக வாதவூரர் நந்தியின் அவதாரமாகத் தோன்றியருளினார் என்றும், திருவாதவூரர் என்னும்பிள்ளைத் திருநாமம் சூட்டப்பெற்றனர் என்றும் அந்நூல் அறிவிக்கின்றது.

### வாதவூரர் வந்த மரபு

திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் வாதவூரரை ஆமாத்தியர் மரபினர் என்றும், பரஞ்சோதியார் திருவிளையாடலும் திருவாதவூரடிகள் புராணமும் அமாத்தியப் பிராமண மரபினர் என்றும் குறிப்பிடுகின்றன. பண்டிதமணி கதிரேசச் செட்டியாரவர்கள் தாம் வரைந்துள்ள திருச்சதகம் கதிர்மணி விளக்கம் முன்னுரையில் வாதவூரர் ஆதிசைவ அந்தண மரபினர் என்று கூறுகின்றனர். பிராமணராயிருந்து மந்திரிப் பதவியைத் தாங்கியமையால் இவரும் இவர் குலத்தினரும் அமாத்தியப் பிராமணர் என்று அழைக்கப் பெற்றனர். நேபாளத்துக்கு அருகில் அமாத்திய தேசம் என்ற சிறு நாடு ஒன்று உண்டு. அத் தேசத்தைச் சார்ந்த பிராமணரை அமாத்தியப் பிராமணர் என்று கூறலாம். விசய நகரத்திற்குப் பக்கத்தில் உள்ள ஓர்

ஊரில் அமாத்தியப் பிராமணர் என்ற ஒரு வகுப்பினர் உளர் என்று வரலாற்று ஆசிரியர் பேசுவர். இனித் தெலுங்கு நாட்டில் வாழும் பிராமணர்களில் ஒரு பகுதியினராகிய நியோகி என்ற பிரிவினருக்கு அமாத்தியர் என்று மற்றெரு பெயரும் வழங்குகிறது என்பர். நியோகி என்ற சொல்லுக்கு அரசியல் அலுவலாளன் என்பது பொருளாகும். இத்தகைய அந்தணர் பலருள்ளே ஏதேனும் ஒரு வகையினைச் சார்ந்த அமாத்தியப் பிராமணராகவே வாதவூரர் இருக்கவேண்டும்.

வாதவூரர் மாணிக்கவாசகராதல்

இவருக்கு மாணிக்கவாசகர் என்ற திருப்பெயர் இறைவனால் அருளப்பெற்றதாகும். திருப்பெருந்துறைக் குருந்தமர நீழலில் குரு வடிவாய் வீற்றிருந்த சிவபெருமானிடம் உபதேசம் பெற்ற நாளில் சிவனது அநாதி முறைமையான பழைமையினைச் சிவபுராணம் என்னும் செந்தமிழ் அருட்பனுவலாகப் பாடிப் பரவினர். அப்பாடலின் சிறப்பைக் கண்ட சிவபிரான், "நின் பாடலிலுள்ள ஒவ்வொரு சொல்லும் விலை மதிக்க முடியாத வியத்தகு மாணிக்கமாகும்; மாணிக்கம் போன்ற வாசகங்களை நேசத்தால் நெஞ்சுருகப் பாடும் நீ மாணிக்க வாசகனய் மாநிலத்து மன்னுக!" என்று வாழ்த்தியருளினர். அதனல் 'மாணிக்கவாசகன்' என்னும் திருப்பெயரை வாதவூரர் பெறுவாராயினர்.

வாதவூரர் அன்பு வடிவம்

மாணிக்கவாசகர் இறைவன் திருவருள் அமுதத்தை நிறைய உண்டு, சிவாநுபவச் செல்வராக விளங்கினர். அந்நிலையில் யான் பெற்ற இன்பத்தை இவ் வையகமும் பெற்றுய்ய வேண்டும் என்ற பேரருள்

உள்ளத்தால், தம் அருளநுபவத்தைத் திருவாசகப் பாக்களின் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார். திருவாசகப் பாக்கள், மாணிக்கவாசகப் பெருமானின் சிவாநுபவ நிறைவில் பொங்கித் ததும்பி வெளிப்போந்த அருளமுதப் பெரு வெள்ளமாகும்.

*'என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்துகரைந்(து)*
*அன்புருவாய் நிற்க அலைந்தேன் பராபரமே.'*

என்று பாடினர் தாயுமானர். இவ் அடிகளுக்கு ஓர் இலக்கியமாய் அன்பே வடிவாய் விளங்கியவர் மாணிக்கவாசகர். அவரது அன்பு நெறியை வியந்து அத் தாயுமானரே, 'வாதவூர் ஐயன் அன்பை வாஞ்சிப்பது எந்நாளோ ?' என்றும் இயம்பினர்.

மகளிர் ஆடலும் மாணிக்கவாசகரும்

இங்ஙனம் அன்பு வடிவாய் அருள்நெறியில் தலைப்பட்ட மாணிக்கவாசகர் பேரின்ப நிலையில் தாம் அனுபவித்த உண்மைகளையெல்லாம் அறிவிற் சிறியாரும் அறிந்து இன்புறும் வண்ணம் இசையினிமை மிக்க இன்தமிழ்ப் பாடல்களாக வெளிப்படுத்திய முறை வியத்தற்குரியதாகும். அம்மானை, பொற்சுண்ணம், உந்தி, சாழல், தெள்ளேணம், ஊசல் முதலிய மகளிர் விளையாட்டுக்களில் அவர் தம்முள் உரையாடும் முகமாக அரிய அனுபவ உண்மைகளை எளிய முறையில் தெளிவுபடுத்தியுள்ளார். இச் செயல் அவர் மக்கள் பால் கொண்ட பெருங் கருணைக்குத் தக்க சான்றாகும். குயிலை முன்னிலைப் படுத்தி இறைவன் அருட்குணங்களை இவ்வாறு கூவுக என்றும், வண்டுகளை நோக்கி 'நீவிர் இறைவன் பாத கமலங்களில் சென்று ஊதுக,' என்றும் அருளிய திருவாசகப் பாடல்களை நோக்குங்

கால் ஓசையொலியெல்லாம் கடவுள் மயமாகக் கண் டார் என்பது புலனாகும்.

திருவாசகத்தில் ஒருவாசகம்

இத்தகைய திருவாசகத்தில் ஒரு வாசகத்தை நோக்குவோம். திருவாசகத்தில் திருக்கோத்தும்பி என்றொரு பதிகம் உண்டு. தும்பி என்பது வண்டு; கோத்தும்பி என்பது அரசவண்டைக் குறிக்கும் பெயர். வண்டுகளுள்ளே சிறந்த இனத்தைச் சேர்ந்த வண் டைக் கோத்தும்பி என்று கூறுவர். அத்தகைய அரச வண்டை அழைத்து மாணிக்கவாசகர் அரியதோர் அறிவுரை வழங்கினர். 'வண்டே! நீ கண்ட கண்ட மலர்களில் எல்லாம் சென்று வாய்வலிக்க ஊதுகின் றனையே. அதனால் என்ன பயனைக் கண்டாய்? தினை யளவு தேனை அளிக்கும் அப் பூக்களில் சென்று ஊது வதை ஒழிவாய். தில்லைக்கூத்தன் திருவடித் தாமரை மலர்களில் சென்று நன்றாக இன்னிசையுடன் ஊதுக. அவ்வாறு ஊதினால் நீ அடையும் இன்பத்தை என் னென்பேன்! அப் பெருமான் திருவடித்தாமரை மல ரில் பொங்கித் ததும்பி வழியும் ஆனந்தத்தேன் நினைக் குந்தோறும் இனிக்கும்; காணுந்தோறும் பேசுந் தோறும் எப்போதும் உடம்பிலுள்ள எலும்புகள் எல் லாம் நெக்கு நெக்குருகுமாறு மிக்க இன்பத்தை விளைக் கும்.' இவ்வாறு வண்டிற்கு நல்லுரை வழங்குவாரைப் போல வையத்து மக்களுக்கு மெய்யுரை வழங்கிய அவ ரது மேதகவை என்னென்பது! சிற்றின்பத்தில் மூழ் கிச் சீரழியும் பாருலக மக்கட்குப் பேரின்பந்தரும் இறை வன் அருள்தேனைப் பருக முயலுமாறு தூண்டும் மதி யமைச்சரின் அறிவுத் திறம் வியக்கற் பாலதாகும்.

மற்ருெரு வாசகத்தின் மாண்பு

மற்ருெரு வாசகத்தையும் நோக்கி மகிழ்வோம். ஆவின் பாலே நன்ருகக் கழுவிய கலத்தில் பெய்து வைத்தால் அது பாழாகாது பக்குவமாக இருக்கும். அதனைக் கழுவப்பெருத கலத்தில் பெய்து வைத் தாலோ அதன் சுவை கெட்டு வீணுகும். ஆதலின் கலத்தைத் தக்க கருவி கொண்டு அழுக்கை ஒழித்துத் தூய்மைப்படுத்திய பின்னரே ஆவின் பாலே அதன்கட் பெய்து வைத்தல் வேண்டும். இஃது உலகியலிற் காண்பது.

இறைவன் அருளாரமுதை மாணிக்கவாசகரின் உள்ளமாகிய கொள்கலத்தில் பெய்து வைக்கத் திருவு ளங் கொண்டார். அவரது உள்ளத்தில் நீண்டகால மாக நிறைத்து வைத்த துன்பங்களை அறவே ஒழித் தார். பின் மயக்க வடிவாகப் படிந்து கிடந்த இருளைத் தம் அருட்பார்வைப் பேரொளியால் போக்கினர். பேரின்ப மயமாகிய அருளமுதைப் பெய்து இன்பமூட் டினர். அந் நிலேயில் மாணிக்கவாசகரின் உள்ள முழு தும் அன்பு மயமாக மாறிற்று. அவ் அன்பு ஆசனத்தில் இறைவன் வீற்றிருந்தருளினர். இவ் உண்மை புல னுகுமாறு, ‘சோதியாய் நின்று இருளகற்றித், துன் பம் தொடர்வறுத்து, இன்பம் பெருக்கி, அன்பமைத்து என்னுடைய சிந்தையே ஊராகக் கொண்டான்,’ என்று அழகு பொருந்தத் திருவாய் மலர்ந்தருளினர்.

> ‘இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
> துன்பம் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
> சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
> ஊராகக் கொண்டான் உவந்து.’

என்பது திருவாசகம்.

### திருவாசகம் என்னும் தேன்

இத்தகைய திருவாசகத்தைப் பலகால் ஓதி, அதன் சுவையில் ஆழ்ந்த பெரியார் ஒருவர் 'திருவாசகம் என்னும் தேன்,' என்று பாராட்டினர். தேன் உண் பாருடைய நெஞ்சிற்கு விஞ்சிய வலியூட்டும். குரல் இனிமையை உண்டாக்கும். மிகுதியாக உண்டார்க்கு மலம் கழிக்கும்; பித்தம் தணிக்கும்; பிணி தீர்க்கும். அதுபோலத் திருவாசகத் தேன் உயிருக்கு மெய்ஞ் ஞான உணர்வாகிய வலியை ஊட்டும். சேயின் குரல் போல இனிமையாக்கி, இறைவனாகிய தாய்க்கு அருளை மிகுவிக்கும்; உயிர்கள் எல்லாவற்றிற்கும் இனியராக் கும். பெரிதும் தோய்ந்தால் பிறவித் தளையாகிய மூல மலத்தை அறுத்தொழிக்கும். பிறவி நோயைத் தீர்க் கும். ஆதலால் திருவாசகம் என்னும் தேன் அல்லல் அறுத்து ஆனந்தமாக்கியது என்று சிறப்பித்தார்.

### திருவாசகமும் சிவப்பிரகாசரும்

தவப்பெருஞ் செல்வராகிய சிவப்பிரகாசர் வேதத் திற்கும் திருவாசகத்திற்கும் உள்ள வேற்றுமையை விளக்குகின்றார். வேதம் ஓதினால் விழிநீர் பெருக்கி, நெஞ்சம் நெக்குருகி நிற்பவரைக் காண்கின்றோமில்லை. திருவாசகத்தை ஒருகால் ஓதினாலும் கருங்கல் மனமும் கரைந்து உருகுகின்றது; கண்களில் மணற்கேணியிற் போல நீர் சுரக்கின்றது; உடம்பு மயிர்க்கூச்செறிகின் றது; உள்ளமும் உடம்பும் ஒருங்கே நடுங்குகின்றன; அன்புருவாய் ஆகிவிடுகின்றனர் என்று விளக்கினார்.

### திருவாசகமும் அருட்பிரகாசரும்

கற்பவர் உள்ளமெல்லாம் கனிவிக்கும் கவிமழை பொழிந்த அருட்பிரகாச வள்ளலார் திருவாசகத்தைத்

தமீது உபாசனுமூர்த்தமாகக் கொண்டு உளங்கலந்து பாடிப்பாடி இன்புற்றவர். அதனுலேயே அவருடைய பாடல்கள் முழுவதும் திருவாசகம் போல மனம் கரைக்கும் மாண்புடையவாயின. திருவாசகம் அவருக்கு அளித்த இன்பத்தை ஒரு பாடலில் தெளிவாக அறிவிக்கின்ருர். 'நான் திருவாசகத்தை உளங்கலந்து ஓதும்போதெல்லாம் அது தேன், பால், தீங்கனி, தித்திக்கும் கருப்பஞ்சாறு எல்லாம் கலந்து உண்டாற் போல ஊனினும் உயிரினும் கலந்து உவட்டாமல் இனிக்கின்றது,' என்று குறிக்கின்ருர். மேலும் திருவாசகம் ஓதக் கேட்ட கீழ்ப்பறவைச் சாதிகளும் வேட்டையாடுதற்குரிய காட்டு விலங்குகளும் மெய்ஞ்ஞான நாட்டத்தை மேவும் என்று கூறுகின்ருர்.

திருவாசகமும் சுந்தரம்பிள்ளையும்

பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் திருவாசகத்தின் பெருமையைத் தமது மனேன்மணீயத்தில் பேசுகின்றனர். அம்பலத்தாடும் ஈசன், எல்லாம் அழிந்தொழியும் கடையூழிக் காலத்தில் தமக்கு வரும் தனிமையை இனிமையாகக் கழித்துக் கொள்ளுதற் பொருட்டே திருவாசகத்தில் ஒரு பிரதியைத் தாமே எழுதிவைத்துக் கொண்டார்; மனத்தைக் கரைத்து மலத்தைக் கெடுக்கும் திருவாசகத்தை ஓதி இன்பம் கண்டவர்கள் சடைமுடி தரித்துக் காடு புகுந்து கண் மூடியிருந்து கதறமாட்டார்கள் என்று திருவாசகத்தின் பெருமையை விளக்கினர்.

திருவாசகமும் போப்பையரும்

புறச்சமயத் தலைவராய்த் தமிழ்நாடு புகுந்த ஜி. யூ. போப்பையர் இந்நூலைப் பாராட்டும் முறை மிகச்

சிறப்பு வாய்ந்ததாகும். "உலகிலுள்ள சமயங்களில் உயர்ந்த உண்மையான சமயம் சைவமே; தத்துவ சாத்திரங்களில் சைவசித்தாந்தமே ஏனையவற்றைக் காட்டிலும் பொது நோக்குடையது; சைவ சித்தாந் தத்தின் தெளிதேனாகிய திருவாசகம் ஐம்பத்தொரு பதிகங்களால் ஆக்கப் பெற்றது; அது தென்னிந்தி யாவிலுள்ள திருக்கோவில் ஒவ்வொன்றிலும், ஒவ் வொரு தமிழனுடைய உதட்டிலும் உலாவிவரும் உயர் வுடையது; அது உள்ளத்தை உருக்கும் ஒரு தனிச் செந்நூல்." இவ்வாறு கிறித்துவ சமயத்தைப் பரப்ப வந்த பாதிரியார் பாராட்டினர்.

### திருவாசகம் பற்றிய பழமொழிகள்

திருவாசகத்தைப் பற்றி வழங்கும் பழமொழிகள் பலவாகும். மனத்தை உருக்கும் தனிச் சிறப்புடையது திருவாசகம். அதற்கு உருகாதார் மனம் இரும்பினும் வலியதாகும். அது பிறிதொன்றற்கும் உருகாது என்று நம் முன்னோர் உணர்ந்தனர். ஆதலின் 'திருவாச கத்துக்கு உருகாதார் ஒருவாசகத்திற்கும் உருகார்' என்று போற்றிப் பரவினர்.

திருவாசகத்தில் உயிர்நாடியான பகுதி திருவெம் பாவை என்பது. அது மாணிக்கவாசகரால் திருவண்ணா மலையில் அருளிச் செய்யப்பெற்றது. ஆயினும் மார்கழித் திங்கள் திருவாதிரைத் திருநாளில் தில்லையில் ஓதப்பெறுவது. அதனால் அங்குள்ள சிறுவர் முதல் அனைவரும் கற்றிருப்பர். ஓதாது உணர்ந்த வித்தையாக அங்குள்ளார் நாவில் பயிலும் நல்லியல்புடையது அதனால் 'சிதம்பரத்தில் பிறந்த பிள்ளைக்குத் திருவெம்

பாவை கற்றுக் கொடுக்க வேண்டுமா ?' என்னும் பழமொழி வழங்குவதாயிற்று.

மாணிக்கவாசகர் பாண்டிய நாட்டில் தோன்றி மதுரை மாநகரில் மதியமைச்சராகப் பணிபுரிந்தும் திருவாசகப் பாடல்களில் பெரும்பகுதி தில்லையைப் பற்றியதாக இருத்தலின் 'தில்லை பாதி திருவாசகத்தில்' என்னும் பழமொழி எழலாயிற்று.

திருக்கோவையார் சிறப்பு

மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையார் தனிச் சிறப்புடையதொரு நூலாகும். 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக!' என்று தில்லைக் கூத்தப் பெருமானே அன்புடன் வேண்டிக் கொள்ள, மாணிக்க வாசகர் அப் பெருமானையே தலைவராகக் கொண்டு இந் நூலைப் பாடினார். தமிழில் உள்ள பிரபந்த வகைகளுள் ஒன்றாகிய கோவை இலக்கியங்களுள் தலையாயது திருக் கோவையார். இதனைத் திருச்சிற்றம்பலக் கோவையார் என்றும் கூறுவர். பிற கோவை நூல்களுக்கெல்லாம் தலைவர் பெயரையோ, அவர்தம் நகரப் பெயரையோ அடை மொழியாகச் சேர்த்துக் கூறுவர். திருக்கோவை யாருக்கோ அத்தகைய அடை மொழிகள் சேர்க்கப் பெறாமல் 'கோவை' என்ற பெயருடன் முன்னும் பின்னும் முறையே 'திரு' என்னும் அடைமொழியும், 'ஆர்' என்னும் விகுதியும் சேர்க்கப் பெற்றுள்ளன. அவை இந்நூலின் தெய்வ நலத்தை விளக்கும் அருமையுடையனவாகும்.

புலவர் போற்றுதல்

சிற்றின்பமும் பேரின்பமும் கலந்து கமழும் தெய்வத் திருநூலாகிய திருக்கோவையார் கற்பவர்

கருத்திற்கு ஏற்றவாறு தோற்றமளிக்கும் இனிய நூலாகும். அந்தணர் இதனை வேதம் என்று வியந்தோதுவர். யோகியர் இதனை ஆகமத்தின் அடிப்படையான நூல் என்று குறிப்பர். காமுகர் இஃதொரு காம நூல் என்று கற்றுக் கற்றுக் கழிபேரின்பம் எய்துவர். தருக்க நூலார் இது சிறந்ததொரு தருக்கநூல் என்று தலைக்கொண்டு போற்றுவர். புலவர்களோ இஃதோர் இலக்கண நூல் என்று கற்றுத் தெளிவர். இத்தகைய பல்சுவைக் களஞ்சியமாகத் திருக்கோவையார் திகழ்கின்றதென மகிழ்ந்து போற்றியுள்ளார் ஒரு புலவர்.

சைவ சமயத் தோத்திர நூல்கள் பன்னிரு திருமுறைகளாகப் பகுக்கப் பெற்றுள்ளன அவற்றுள் திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாந் திருமுறையாக இடம் பெற்றுள்ளன.

---

## ௯. சச்சந்தன் அமைச்சன்

### சிந்தாமணியின் சிறப்பு

தமிழணங்கின் திருமுடியை அணிசெய்யும் மணியாகத் திகழ்வது சிந்தாமணி என்னும் செந்தமிழ்க் காவியமாகும். ஐம்பெருங்காவியங்களுள் தலைசிறந்து விளங்குவது இச் சிந்தாமணியே. இதன் முழுப்பெயர் சீவக சிந்தாமணி என்பதாயினும், தமிழர் சிந்தையெல்லாம் இன்பூட்டும் இனிய காவியமாக எழுந்ததாகலின் இதனைக் கற்றோர் சிந்தாமணி என்றே வழங்கலுற்றனர். இந்நூல் தோன்றிய பின்னர் இதனைக் கற்றுணர்ந்த புலவர்களே சிறந்த புலவர்கள் என்று போற்றப் பெற்றனரெனின், இதன் பெற்றியை என்னென்பது?

### மண நூல் மாண்பு

இதனை ' மண நூல் ' என்றும் அறிஞர் மன மகிழ்ந்து போற்றுவர். இக்காவியத்தின் தலைவனாகிய சீவகன், மகளிர் எண்மரை மணங்கொண்டு இன்புற்ற வரலாற்றை விரித்துரைப்பதால் இந்நூல் மண நூல் என்று பாராட்டப் பெற்றது என்பர். சொல்மணமும் பொருள்மணமும் நிறைந்து கமழும் சிறந்த இயல்பினால் இந்நூல் மண நூலெனப் பெயர்பெற்றது என்று கூறலும் தகும். இழுமென் மொழியால் விழுமியது நுவலும் வனப்பினைத் 'தோல்' என்று மொழிவர் தொல்காப்பியர். இவ் வனப்பிற்கு எடுத்துக் காட்டாகச் சிந்தாமணிக் காவியத்தையே குறிப்பிட்டார் உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர். தொல்காப்பியம், கலித்தொகை, பத்துப்பாட்டு, குறுந்தொகை முதலிய

பழந்தமிழ்ப் பெருநூல்களுக்கு உயர்ந்த உரை வகுத்த உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியரால் நல்லுரை வகுக்கும் சிறப்பைப் பெற்றது இச் சிந்தாமணி. அவ் உரையாசிரியரின் உள்ளத்தைக் கவரும் உயர்ந்த காவியநலத்தைச் சிந்தாமணி பெற்றிருந்ததனாலன்றோ அவர் அதற்கும் அரியதோர் உரை வகுக்கலாயினர்.

### புவியரசும் கவியரசும் போற்றுதல்

சேக்கிழார் பெருமான் காலத்தே சோழ நாட்டை யாண்ட அநபாய சோழன் செந்தமிழ் நூல்களுள் 'சிந்தாமணியே சிறந்ததெனக் கொண்டு அல்லும் பகலும் அந்நூலையே படித்துச் சுவைத்தான்; தன் அவையிலிருந்த புலவர்களையும் அதனையே சொல்லு மாறு செய்து கேட்டு இன்புற்றான். கவியரசராகிய கம்பர் பெருமான் தாம் ' இராமகாவியம் இயற்றுதற்குச் சிந்தாமணி, திருக்குறள் என்னும் தெள்ளமுத வள்ளங் களிலிருந்து ஒவ்வோர் அகப்பை எடுத்துக்கொண் டேன்' என்று இயம்பியிருப்பாராயின் சிந்தாமணிக் காவியத்தின் செழுஞ்சுவை நலத்தை என்னென்று மொழிவது! இந்நூல் அரசர் முதல் அனைவரும் விரும்பிக் கற்கும் பெருஞ்சுவை செறிந்தது; இன்பத் துறை நாடும் இளையரேயன்றித் துறவு நாடும் தூயோரும் பேணிக் கற்கும் பெருமையுடையது.

### சச்சந்தன் அமைச்சர்கள்

இத்தகைய இனிய காவியத்தின் தலைவனாகிய சீவகநம்பியின் தந்தையாய் ஏமாங்கத நாட்டை ஆண்ட வேந்தன் சச்சந்தன் என்பான். இவ் வேந்தனுக்கு அமைச்சராக விளங்கினோர் கட்டியங்காரன், நிமித்

திகன், உருத்திரதத்தன், தருமதத்தன், மதனன் முதலிய பலராவர். அவருள்ளே தலைமை சான்ற முதலமைச்சனுகச் சிறப்புற்று விளங்கியவன் கட்டியங் காரன் என்பான். இவன் சச்சந்தனுக்கு உயிர்த்துணை வனுய் இருந்தான். அவனுக்கு ஏற்பட்ட சிறப்புக்கள் எல்லாவற்றிற்கும் கட்டியங்காரனே காரணமாவான் என்பதை அவனே இயம்புகின்ருன். 'எனக்குயிர் என்னப்பட்டான் என்னலால் பிறரையில்லான்' என்று சச்சந்தன் அவனைப் பாராட்டுவதால் புலனுகும்.

## தையல்பால் மையல்

ஏமாங்கத நாட்டை இராசமாபுரம் என்னும் நன் னகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த சச்சந்தன், தன் மாமனும் மன்னனுமாக விளங்கிய தத்தன் என்பானின் தனிப்பெருமகளாகிய விசயை என்பாளை விழைந்து மணந்தான். அழகே உருவாய் அமைந்த அம்மங்கை நல்லாளை மணம் செய்த பின்னர், மன்னனுகிய சச்சந்தன் அரசியற் செயல்களை அறவே மறந்தான். அவளைப் பிரியாது கூடிக் களிப்பதற்கே பிறந்ததாக நினைந்தான். அத்தையல்பால் கொண்ட மையல் மிகுதியால் அரசியற் பொறுப்பையே முற் றிலும் விட்டொழிக்க எண்ணினுன்.

## அரசினை அமைச்சன்பால் சுமத்தல்

ஒருநாள் சச்சந்தன் தன் முதலமைச்சனுகிய கட்டியங்காரனைத் தனியே அழைத்து, "அமைச்ச! என் தேவியாகிய விசயை, யான் முன்னைப் பிறவிகளில் செய்த வசையிலாத் தவத்தால் வந்தவள்; எனக்குத் தீஞ்சுவைத் தெள்ளமுதம் போன்றவள்; அன்னவளைச்

சின்னேரமும் பிரிந்திருக்க என் மனம் இசையவில்லை, ஆதலின் அரசியற் பொறுப்பை உன்பால் சுமத்தி, அந்தப்புரத்திலேயே அவளுடன் இருக்க விரும்பு கின்றேன்; அரசர்க்குரிய சிறப்புக்களுள் குடையும் முடியும் தவிர ஏனையவெல்லாம் பெற்று நீயே இந் நாட்டை ஆளுக," என்று பணித்தான்.

பழுதெண்ணும் அமைச்சன்

கட்டியங்காரனே பக்கத்திருந்தே பழுதெண்ணும் மந்திரியாகப் பணியாற்றி வந்தவன். அரசினை எவ்வா றேனும் கவரவேண்டும் என்ற கருத்துடனேயே காலம் நோக்கி இருந்தான். மன்னவன் அதனை உணர்ந்தா னல்லன்! தன் மனம் போனவாறு நடத்தற்குக் கட்டியங்காரன் நல்ல துணைவனாய் விளங்கியமையால் அவனையே அமைச்சருள் சிறந்தவன் என்று மகிழ்ந்து போற்றினான் சச்சந்தன். மேலும் முன் நிகழ்ந்த பல போர்களில் அக் கட்டியங்காரனே மன்னனுக்கு வெற்றி விளைதற்கு உற்ற காரணமாக இருந்தான். இத்தகைய பல காரணங்களால் அவனிடத்துச் சச்சந்தன் முழு நம்பிக்கை கொண்டிருந்தான். தன் தீய எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளும் காலத்தை எதிர்நோக்கி யிருந்த கட்டியங்காரனுக்கு அரசனது செயல் அரிய வாய்ப்பாக அமைந்தது. அவன் அரசனுக்கு இனி யவன் போல நடிக்கலுற்றான்.

கட்டியங்காரன் கட்டுரை

அமைச்சனாகிய கட்டியங்காரன் அரசனை நோக்கி, "அரசே! யானையின்மீது இடத்தக்க அருந் தவிசை இழிந்த நாயின்மேல் இட்டதற்கு ஒப்பாகும் தங்கள்

செயல்," என்று பணிவுடன் மறுத்துரைத்தான். அது கேட்ட சச்சந்தன், "என்பொருட்டு நீ மறுக்காது இவ் வரசை ஏற்று நடத்தவேண்டும்," என்று அன்புடன் வேண்டினன்.

"அண்ணல்தான் உரைப்பக் கேட்டே
'அடுகளிற்(று) எருத்தி னிட்ட
வண்ணப்பூந் தவிசு தன்னை
ஞமலிமேல் இட்ட தொக்கும்
கண்ணகல் ஞாலம் காத்தல்'
எனக்கெனக், கமழும் கண்ணி
மண்ணகம் வளரும் தோளான்
'மறுத்துநீ மொழியல்' என்றான்."

இவ்வாறு கூறக்கேட்ட கட்டியங்காரன் அரசனின் அடிகளில் விழுந்து வணங்கினன். "அரசே! தாங்கள் கோப்பெருந்தேவியைப் பிரியாது கூடிப் பேரின்பம் பெறுக! யான் பழியெழாவாறு இவ் அரசபாரத்தை ஏற்று இனிது நடத்துவேன்," என்று மொழிந்து அவ் விடத்தைவிட்டு அகன்றான்.

நிமித்திகன் நேர்மை

இச் செய்தியை அறிந்த அமைச்சனாகிய நிமித்திகன் என்பான், அரசனை அணுகி, "அரசே! நீவிர் அரசினைப் பிறனொருவன்பால் அளிப்பது முறைமையன்று; அவ்வாறு செய்யின் நிலமும் திருவும் நும்மை விட்டு நீங்கும்," என்று அறிவுறுத்தினன். அதனைக் கேட்ட சச்சந்தன், "நிமித்திக! நீ இவ்வாறு இயம்பற்க! கட்டியங்காரன் எனக்கு உயிரனையான்; யான் வேறு அவன் வேறல்லன்; இருவரும் ஒருவராவோம்; முன்னம் நிகழ்ந்த பன்னெடும் போர்களில் எனக்கு வெற்றி விளைத்த வீரன் அவன்; அன்னவனுக்கு

யான் செய்வன செய்தேன்; அவன் எனக்குச் செய்வன செய்க; நீ பொருமையால் சிறிதும் புகலவேண்டா,'' என்று சினந்து மொழிந்தான்.

அமைச்சன் அறிவுரை

நிமித்திகன் அறம் பிறழாத திறமுடைய நல்லமைச்சனுதலின் முதற்கண் பொதுவகையால் அரசனுக்கு அறிவுறுத்தினன். அரசன் அறிகொன்று அறியான் எனினும் உழையிருந்த அமைச்சன் உறுதி உரைக்கும் கடப்பாடுடையனுதலின் சிறப்பு வகையால் அவனை மேலும் இடித்துரைக்கத் தொடங்கினன். ''வேந்தே! திலோத்தமையை விரும்பிய நான்முகன் விண்ணுலகை இழந்து வீயாப் பழியையும் சுமந்தான். மலையரசன் மகளை இடப்பாகம் கொண்ட ஈசனுர்க்கு என்றும் தீராத பழி சேரலாயிற்று. தொழுநையாற்றில் நீராடிய தோகையரின் துகிலைக் கவர்ந்து சென்ற கண்ணனுக்கு எந்நாளும் மாருத பழியே நேர்ந்தது. காமம் கனிய நின்ற ஓர் உயிர்ப் பொருளுக்கிரங்கியது குறித்துப் புத்தனும் இடுகாட்டில் விழுந்த மலர் மாலையாக இழித்துப் பேசப்பட்டான். பாண்டவர் ஐவரும் பாவை ஒருத்தியையே மனைவியாகக் கொண்டமையால் இன்றளவும் பழி நின்று நிலவுகின்றது. இவற்றையெல்லாம் அறிந்த நீவிரோ இவ்வாறு தையல்பால் கொண்டமையலால் மதியிழப்பது?'' என்று மனத்தில் பதியுமாறு இடித்துரைத்தான்.

உருத்திரதத்தன் உரை

நிமித்திகன் அறிவுரையைக் கேட்ட மன்னன் வாளாவிருந்தான். அது கண்ட உருத்திரதத்தன் என்னும் நல்லமைச்சன், மன்னனை அணுகி, ''அரசரேறே!

இந்திரனும் மந்திரத் தலைவர் சொல்லை மதியாது இகழ் வது இல்லை ; அவனை யொத்த பேரறிவினராகிய நீவிர் அமைச்சர் சொல்லை இகழ்ந்திருத்தற்குக் காரணம் யாதோ ?'' என்று கூறினன். நல்லமைச்சர் சொல்லை யெல்லாம் கேட்ட மன்னன், ''இவ்வுலகில் பிறந்தார் ஒவ்வொருவர்க்கும் அவர் கருத்தோன்றும் காலத்தி லேயே அவரவர்க்குரிய இன்பமும் வாழ்நாளும் எண்ணி அளக்கப்பட்டுள்ளன ; அதற்கு மாருக இவ் வுலகில் ஏதும் நிகழ்வதில்லை என்னும் உறுதியுடை யவன் யான் ; நீவிர் எனக்கு அறிவு புகட்டவேண்டா'' எனப் புகன்ருன். அவனது மொழிகேட்ட அமைச்சர் செயலற்றுத் திரும்பினர். அரசனது தவறுபாட்டைக் காணப்பொருத நிமித்திகன் துறவு பூண்டான்.

கட்டியங்காரன் சூழ்ச்சி

அரசுரிமை பெற்ற கட்டியங்காரனே அரசனைக் கொன்று நாட்டினைத் தனக்கே உரிமையாக்கிக் கொள்ளச் சூழ்ச்சி செய்யலானன். ஒருநாள் கட்டியங் காரன், நீதிநூல் ஓதிய அறிஞர்களையும் அமைச்சர் களையும் ஒருங்கே கூட்டி, ''நம் மன்னனுக்குப் பகையாய தெய்வம் ஒன்றுள்ளது ; அது அவனைக் கொல்லுமாறு அல்லும் பகலும் வந்து என்னை வருத்துகின்றது ; அவனது அரியணையில் என்னையே அமருமாறும் தூண்டுகின்றது ; இதுபற்றிய நுங்கள் கருத்து யாது?'' என்று வினவினன். அதனைக் கேட்ட அமைச்சர்கள் திடுக்குற்றனர்.

தருமதத்தன் அறிவுரை

ஆங்கிருந்த அமைச்சருள் ஒருவனகிய தரும தத்தன் என்பான் எழுந்து, ''கட்டியங்கார ! மன்னன்

மகளிர் மோகமாகிய ஆழ்கடலில் மூழ்கினன் ; அவனது கேட்டைக் கண்ட நிமித்திகன் உள்ளம் ஆற்ருெணுது துறவு பூண்டான் ; நாடும் அரசும் உன் கையிலேயே உள்ளன ; அவ்வாறு இருக்கவும் அரசனைக் கொல்லத் துணியும் கொடியோனுகிய நின்னைவிட்டுக் குலமும் திருவும் அகலும் ; மன்னவன், ஆசிரியன், தாய், தந்தை, தம்முன் என்ற ஐவருக்கும் தீங்கு சூழ்ந்தவன் நீங்காத நிரையத்துள் ஆழ்வான் ; அமைச்சனுக இருந்து அரசினைக் கவர்ந்தோருள் எவரும் வாழ்ந் தாரல்லர் ; இவற்றையெல்லாம் எண்ணி நடந்தால் நன்மையும் புகழும் நண்ணுவாய்,'' என்று நீதிமுறைக் கேற்ப இடித்துரைத்தான். இவனது உரையைக் கேட்டும் மதனன் என்னும் அமைச்சன் கொதித்தெழுந் தான். அவன் கட்டியங்காரனுக்கு உற்ற மைத்துனக் கேண்மையனுதலின் அவனது கெடுமதிக்கெல்லாம் உறுதுணையாய் உலவினன்.

கட்டியங்காரன் மறுமொழி

தருமதத்தன் உரையினைக் கேட்ட கட்டியங்காரன் அவன்மீது கடுஞ்சினம் கொண்டான். எனினும் அதனை ஒருவாறு அடக்கிக்கொண்டு, "உன்னைப்போல் உற் ருர்க்குக் கேடு சூழ்வார் ஒருவரும் இல்லை ; என்னைப் போல் பொறுமையுடையாரும் இவ்வுலகில் பிறர் இல்லை,'' என்று கூறினன். "மண்ணுலகில் மகளிர் போகமே பெரிதெனக் கருதிக் கிடக்கும் வேந்தனுக்கு விண்ணுலக மகளிர் போகம் விளையுமாறு புரியும் செயல் இனியதாகவும், அவனைத் தேவருலகிற்கு அனுப்புவது குற்றமெனக் கூறும் நீ அவனுக்கு ஒவ்வாத செயலையே எண்ணுகிருய்,'' என்று தக்க விடை பகர்வானைப்போல,

'உன்னலால் பிறர்கள் யாரே
உற்றவர்க்(கு) உறாத சூழ்வார் ;
மன்னன்போய்த் துறக்கம் ஆண்டு
வானவர்க்(கு) இறைவ னாக !'

என்று நயம்பட நவின்றான் கட்டியங்காரன். காமத்தால் கட்டுண்டு அறிவிழந்த அரசனுக்கு இக்கேடு தகுவதே என்று எண்ணித் தருமதத்தன் அகன்றான். கட்டியங்காரன் அரசன் உறவினரையெல்லாம் சிறையிலிட்டான். தன்னை ஆதரித்த தீயவர்களைத் துணையாகக் கொண்டு மன்னனுடன் போருக்கு எழுந்தான்.

விசயை கண்ட கனவு

அரசியாகிய விசயையின் அந்தப்புரத்திலேயே சச்சந்தன் கழிபெருங்காமத்தனாய்க் காலம் கழித்து வருங்கால், ஒருநாள் பொழுதுபுலரும் வேளையில் விசயை தீய கனவொன்று கண்டு திடுக்கிட்டு எழுந்தாள். உடனே அருகதேவன் திருவடிகளை வாழ்த்தி வணங்கினாள். கணவனை எழுப்பி, அக் கனவினை விளக்கியுரைத்தாள். கடையாமத்தில் கண்ட கனவாதலின் விரைவில் பயன் விளைக்குமே என்று அஞ்சினாள். அதன் பயன் யாதாகுமோ? என்று அரசனை வினவினாள். அரசனும் அதனை நன்றாக ஆய்ந்து, பின்னர் தனக்கு விளையப்போகும் கேட்டினைத் தெரிந்து கொண்டான். அக்கனவின் முற்பகுதிக்குரிய பயனை மறைத்துப், பிற்பகுதிக்குரிய நலனைமட்டும் தன் தேவிக்குக் கூறி அவளைத் தேற்றினான். 'தேவீ! நின் வயிற்றில் சிறந்த மகன் ஒருவன் உதிப்பான்; அவன் எட்டு மகளிரை மணந்து புகழுடன் அரசாள்வான்; இதுவே நீ கண்ட கனவின் பயனாகும்'' எனக் கூறினான்.

மன்னன் மயிற்பொறி அமைத்தல்

பின்னர், அரசனாகிய சச்சந்தன், தன்னை நோக்கி வரும் இன்னல்கள் பலவுள என்பதை எண்ணி அறிந்தான். அவன் தனக்கு வரும் தீங்குகளைக் குறித்து ஏங்கினானல்லன். கருவுற்றிருக்கும் தன் தேவியைக் காப்பது எங்ஙனம் என்பதுபற்றியே கலங்கினான். பின்னர் ஒருவாறு தேறிக் கைவல்ல தச்சன் ஒருவனை வரவழைத்து, மயில் போன்ற வடிவமைந்த வான வூர்தி யொன்றை அமைக்குமாறு ஆணையிட்டான். அத் தச்சனும் அதனை விரைந்து செய்து கொணர்ந்தான். அப்பொறியினை வலப்புறமாகச் சுழற்றினால் வானில் எழுந்து பறக்கும். இடப்புறமாகச் சுழற்றினால் மெல்லக் கீழிறங்கிக் கால்குவித்து நிற்கும். இத்தகைய மயிற்பொறியைத் திறம்பட அமைத்துதவிய தச்சனைப் பெரிதும் மெச்சித் தக்கவாறு மேன்மைப்படுத்தி அனுப்பினான். அதனை ஊர்ந்து செல்லுமாறு தன் தேவிக்குப் பயிற்சியளித்தான். அவளும் விரைவில் அதனைச் செலுத்தும் திறத்தைத் தெரிந்துகொண்டாள்.

கட்டியங்காரன் போர்க்கோலம்

திடீரென்று கட்டியங்காரன் போர்க்கோலந் தாங்கிப் படைகளுடன் வந்து மன்னன் மாளிகையைச் சூழ்ந்து கொண்டான். வாயிற் காவலர் மன்னனிடம் சென்று கட்டியங்காரன் போர் தொடுத்து வந்திருப்பதை அறிவித்தனர். மன்னன் வீரர்களைக் கூவி அழைத்தான். தனது ஆணைவழி நிற்பார் எவரும் இல்லாமையைக் கண்டான். 'உரிமைமுன் போக்கி யல்லால் ஒளியுடை மன்னர் போகார், ஆதலின், கரு வுற்ற தன் தேவியாகிய விசயைக்கு அறிவுரையும் தெளி

வுரையும் கூறி, மயிற்பொறியில் ஏற்றி அவளை அனுப்பினன். பின்னர்த் தனது உடைவாளை உருவிப் பெருநகை செய்தவனய் மாளிகையினின்று வெளிப் போந்தான். எதிர்ப்பட்டார் அனைவரையும் தன் வாளுக்கு இரையாக்கினன். இறுதியில் தானும் பகைவனது வாளுக்கு இரையாகித் தரையில் விழுந்தான்.

மன்னன் மறைவு

இங்ஙனம் சச்சந்தன், கட்டியங்காரனல் பட்டொழிந்த செயலை ஆசிரியர் கூறுங்கால், அவனுடைய குலப்பெருமையையும் அறச் செங்கோன்மையையும் பாராட்டி,

'ஆய்ந்த குருகுலமாம் ஆழ்கடலி னுள்முளைத்த
அறச்செங்கோல் ஆய்க திரினை
வேந்தர் பெருமானைச் சச்சந்தனை மந்திரிமா
நாகமுடன் விழுங்கிற் றன்றே.'

என்று கழிவிரக்கப்படுகின்ருர். வாளால் வெட்டுண்டு வீழ்ந்து கிடந்த வேந்தனைக் கண்டு கட்டியங்காரன் கண்ணீருகுத்துக் கைதொழுது நின்ருன். அச் சமயத்தில் சச்சந்தன் தன்பால் கொண்டிருந்த பேரன்பும் பெருமதிப்பும் நம்பிக்கையும் அவன் உள்ளத்தில் தோன்றி உறுத்தியிருக்கவேண்டும். இன்றேல் தன்னைக் காணும் மக்கள் 'அரசன்பால் இத்துணை அன்புடையான் அவனை அழித்தற்குத் தக்கதொரு காரணம் இருத்தல்வேண்டும்' என்று எண்ணி அமைந்தொழுகுவர் என நினைந்திருக்கவேண்டும்.

மன்னன் இறந்த செய்தியை அறிந்த நகரமக்கள் மாருத் துயரத்தால் ஆருகக் கண்ணீரைப் பெருக்கினர். கட்டியங்காரன், தானே இனி அரசன் என்று பறை

சாற்றுமாறு பணித்தான். அதனைக் கேட்ட நகர மக்கள், இன்னும் என்னென்ன தீங்குகள் நேருமோ என்று அஞ்சி வருந்தினர். மயிற் பொறியில் சென்று கொண்டிருந்த விசயை, கட்டியங்காரன் அறைவித்த பறையோசை கேட்டு, 'நாயகன் இறந்துபட்டான் போலும்' என்று எண்ணிப் பதைபதைத்தாள். பொறியை வலப்புறமாகச் சுழற்றவும் தவறினாள். அது இடப்புறமாகச் சுழன்று ஒரு சுடுகாட்டில் இறங்கிக் கால்குவித்து நின்றது.

சுடுகாட்டில் தோன்றிய சீவகன்

இரவுப் பொழுதில் அச் சுடுகாட்டை அடைந்த விசயை சிறிது நேரத்தில் ஆண்மகவொன்றைக் கருவுயிர்த்தாள். அச் சமயத்தில் இறந்துபோன தன் மகனை ஆங்கு அடக்கம் செய்ய வந்த கந்துக்கடன் என்னும் வணிகன் அக் குழந்தையை எடுத்துச் சென்று சீவகன் என்று பெயரிட்டு வளர்த்து வந்தான். அச் சீவகன், அச்சணந்தி என்னும் கலைவல்ல ஆசிரியன்பால் எல்லாக் கலைகளையும் கற்றுணர்ந்தான். அவன் சிறந்த வீரனாகவும் உயர்ந்த அறிஞனாகவும் ஒப்பாரும் மிக்காரும் இன்றி விளங்கினான். அவனைப் பெற்ற அரசியாகிய விசயை தெய்வமொன்றின் துணையால் தண்டகவனம் அடைந்து தவப்பள்ளியொன்றில் தன் மகன் நல்வாழ்வு குறித்துத் தவங்கிடந்தாள்.

சீவகனும் கோவிந்தராசனும்

சீவகன் காளைப்பருவமுற்ற நாளையில் ஆசிரியனால் தன் பிறப்பு வரலாற்றை உணர்ந்தான். அவன் பணித்த வண்ணம் குறித்த காலம் வருமளவும் தான்

அரசகுமாரன் என்பதைப் பிறர் அறியா வண்ணம் ஒழுகி வந்தான். தன்னை வளர்த்த தந்தையாகிய கந்துக்கடன்பாலும் அவன் மனைவி சுநந்தையிடத்தும் மாறாத அன்பு பூண்டு ஒழுகினான். தான் ஏமாங்கத நாட்டு அரசினை ஏற்கும் காலம் கைகூடி வரவே, சீவகன் குதிரை வாணிகனைப் போல் வடிவு கொண்டு விதைய நாட்டை அடைந்தான். அந்நாட்டு மன்னனாகிய தன் மாமன் கோவிந்தராசனைக் கண்டு, கட்டியங்காரனை வெல்லுவதற்கு வேண்டியவற்றைச் சூழ்ந்தான்.

### கட்டியங்காரன் விடுத்த ஓலை

அந்நாளில் கோவிந்தராசன், கட்டியங்காரன் தனக்கு வஞ்சனையாக விடுத்திருந்த ஓலையைக் காட்டினான். அவ்வோலையில், 'அசனிவேகம் என்னும் பட்டத்துயானை மதம்பட்டுப் பாகர் நூற்றுவரைக் கொன்று ஓடியது ; சச்சந்தன் அதனை அடக்கிக் கந்திற் பிணிக்க முயன்றபோது அவ் யானையால் குத்துண்டு இறந்தான் ; இனி நீயே இந்நாட்டின் மன்னனாதல் வேண்டும் ; யான் உயிரும் ஈவேன் ; நீ வரின் பழியும் ஒழியும் ; வருக,' என்று குறித்திருந்தான். அதனால் கோவிந்தராசன் ஒருகால் தன்னை எதிர்த்து அழிப்பானோ என்று அஞ்சி, அவனை வஞ்சனையால் ஒழித்து விட அழைத்துள்ளான் என்பது புலனாகின்றது.

### சீவகன் வெற்றி

இதனையெல்லாம் கூர்ந்து நோக்கிய சீவகனும் கோவிந்தராசனும் அவனைத் தாம் இருக்குமிடம் அழைத்தற்கு உபாயம் சூழ்ந்தனர். பின்னர், திரிபன்றி

யொன்றை நிறுவி, 'இதனை அம்பெய்து வீழ்த்துப வர்க்கு என் மகள் இலக்கணையை மணஞ்செய்து தருவேன்,' என்று கோவிந்தராசன் காவலர் பலர்க்கும் கட்டியங்காரனுக்கும் ஓலை விடுத்தான். அதைக் கண்ட கட்டியங்காரன் தன் மக்கள் நூற்றுவருடன் வந்து சேர்ந்தான். வந்திருந்த அரசர்கள் அனைவரும் அத்திரிபன்றியை எய்யமாட்டாராய் உளந்தளர்ந்து அகன்றனர். ஆங்கிருந்த சீவகன் அதனை வீழ்த்தி வெற்றியுற்றான். உடனே கோவிந்தராசன், 'குருகுலத்தில் தோன்றிய கொற்றவன் சீவகன்,' என்பதை ஆங்கிருந்த வேந்தர்களுக்கு விளக்கினான். அப்பொழுது வானகத்தே ஓர் இயக்கன் தோன்றி, "சீவகன் என்னும் சிங்கம், கட்டியங்காரனாகிய களிற்றின் உயிரைச் செகுக்கும்," என்று கூறினான்.

### கட்டியங்காரனுடன் கடும்போர்

உடனே கட்டியங்காரன் சினங்கொண்டு போருக்கு எழுந்தான். அவன் படை திரண்டெழுந்தது. இருதிறத்தாருக்கும் கடும்போர் நிகழ்ந்தது. கட்டியங்காரன் மக்கள் நூற்றுவரும் அப்போரில் மாண்டொழிந்தனர். முடிவில் கட்டியங்காரன் தாமரை வடிவாகப் படை வகுத்துக்கொண்டு போருக்கு மூண்டெழுந்தான். தன் மைந்தர்கள் சிங்கக் குருளைகளைப் போலக் குருதி வெள்ளத்தில் கிடப்பது கண்டு நெஞ்சம் குமுறினான். அப்போது எதிர்ப்பட்ட சீவகனை நோக்கி அசனிவேகத்தின் மேல் அமர்ந்தவாறே பேசத் தொடங்கினான்.

### போர்க்களத்தில் வீரமும் நீதியும்

'வீரனே! நல்வினையுடையாரை நஞ்சும் கொல்லுவதில்லை; தீவினையுடையவராயின் சாவாமையைத்

தரும் தேவாமுதமும் கொன்றொழிக்கும். இதனால் அறி வுடையார் கொல்லுதலையும் கொல்லப்படுதலையும் தம தாகக் கருதார். நெய்யும் திரியும் தீர்ந்தபொழுதே விளக்கும் அவிந்து மறைந்து விடுதல் போல, நல்வினை அற்றபோதே அற்றொழியும் செல்வத்தைப் பற்றி வைக்கவல்லார் உலகில் இல்லை.'

இவ்வாறு அறநெறி பேசிய கட்டியங்காரனை நோக்கிச் சீவகன், "நீ அஞ்சினாய் போலும்," என்றான். அது கேட்ட கட்டியங்காரன், "வெல்வது விதியினாலன்றி வீரத்தாலன்று; ஆதலால் அஞ்சுவது எதற்கு? என்னை வேல்கொண்டு எறிந்தாலும் விழித்த கண்களை இமைத்தல் செய்யேன்," என்று வீர மொழி கூறினான். இருவரும் எதிர்த்துப் பொருதனர். அப்போரில் கட்டியங்காரன் மாய்ந்தான். சீவகன் வெற்றி கண்ட சேனை வெள்ளம் மகிழ்ச்சியால் துள்ளி ஆரவாரித்தது. இவ் வெற்றிச் செய்தியைக் கேள்வி யுற்ற விசயை சீவகனைப் பெற்ற நாளினும் பெருமகிழ் வுற்றாள்.

சீவகனால் வெல்லப்பட்ட கட்டியங்காரன் தீவினையே உருவாகத் திரண்ட தீய அமைச்சனாயினும் ஆட்சியைத் திறம்பட நடத்தும் சூழ்ச்சித்திறன் உடையவனாகக் காணப்படுகிறான். அதனாலேயே சச்சந்தனால் 'வெளிறிலாக் கேள்வியன்,' என்று வியந்து போற்றப் பெறுகிறான். அவனிடத்தே புன்மைக் குணங்கள் பல பொருந்தியிருந்தன. அதனால் ஆசிரியர் அவனைக் 'கரி மாலை நெஞ்சினான்,' என்று கடிந்துரைத்தனர்.

---

## கo. அமைச்சர் அருண்மொழித்தேவர்

பெரிய புராணத்தின் பெருமை

திருத்தக்க தேவரின் தீந்தமிழ்ப் படைப்பாகிய சிந்தாமணிக் காவியம் தோன்றியதற்குப் பின்னரும், கவியரசராகிய கம்பரின் கன்னித்தமிழ்ப் படைப்பாகிய இராம காவியம் எழுவதற்கு முன்னரும், இடைப்பட்ட காலத்தில் தோன்றிய இனியதொரு காவியம் திருத் தொண்டர் புராணம். தமிழில் தோன்றிய புராண நூல் கள் அனைத்தினும் பெருமை வாய்ந்தது திருத்தொண் டர் புராணமாதலின் கற்ருேர் அதனைப் பெரிய புராணம் என்றே பேணிப் போற்றுவாராயினர். பிற புராணங்க ளெல்லாம் பெரும்பாலும் இல்லது புனையும் பெற்றி யுடையனவாகவும் பெரிய புராணம் உண்மை வரலாற் றைத் திண்மையுறத் தெரிவிக்கும் அரிய நூலாக விளங்குகின்றது. இந்நூலைப் பாடுதற்கு இறைவனே அடியெடுத்துக் கொடுத்தமையால் நூல் முழுதும் தெய்வ மணக்கும் செய்யுட்களாகத் திகழ்கின்றன என்று வியந்து போற்றினர் பெருந்தமிழ்ப் புலவராகிய மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை.

பெரியபுராண அமைப்பு

சைவ சமய குரவருள் ஒருவராகிய சுந்தரரைத் தலைவராகக் கொண்டு பாடப்பெற்ற பெரிய புராண மாகிய அரிய காவியத்தில் செயற்கரிய செயல்களைச் செய்து சிவனருள் பெற்ற பெருமக்கள் அறுபத்து மூவரின் அருள் நிறைந்த வரலாறுகள் கிளைக் கதைக ளாக இணைக்கப் பெற்றுள்ளன. பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பசுந்தமிழால் பாடப்பெற்ற இந்

நூல் சொல்நயம் பொருள்நயங்களால் தன்னேரில்லாத காவியமாகத் தழைத்தோங்கும் சிறப்புடையது. மங்கலமல்லாத சொற்களே மருவாத வண்ணம் அருள் மணம் கமழ ஆக்கப்பெற்ற பெருமையுடையது.

### பெரிய புராணம் தமிழக வரலாறு

வரலாற்று ஆசிரியர்கள் கி. பி. நான்காம் நூற்றுண்டு முதல் ஏழாம் நூற்றுண்டின் தொடக்கம் வரையுள்ள முந்நூறு ஆண்டுகளில் தமிழகம் இருந்த நிலையை அறிந்து கொள்ளச் சிறந்த சாதனம் ஏதும் இல்லாமையால் அக்காலத்தைத் 'தமிழகத்தின் இருண்ட காலம்' என்று இயம்புவர். அவ் இருண்ட கால வரலாற்றை விளக்கும் கலங்கரை விளக்கமாகத் தோன்றிய சிறந்த நூல் பெரியபுராணமாகும். மேலும் தமிழகத்தின் ஐந்நூறு ஆண்டுச் சரிதத்தை அறிதற்குப் பெருந்துணை செய்வது இந்நூல் என்பர் அறிஞர். சைவசமயத்தின் தெய்வ மாண்பினைத் தெரிக்க வந்த நூலாயினும் காவிய நலமும் வரலாற்று நுட்பமும் கனிந்தொழுகும் இந்நூலை எச்சமயத்தவரும் விரும்பிக் கற்பர்.

### சேக்கிழார் புராண ஆசிரியர்

இத்தகைய இனிய அரிய அருள்நூலை இயற்றியருளிய ஆசிரியர் தெய்வப் புலமைச் சேக்கிழாராவர். இவருடைய பிள்ளைத் திருப்பெயரே அருண்மொழித் தேவர் என்பது. இவர் சோழ நாட்டை யாண்ட இரண்டாம் குலோத்துங்கனுகிய அநபாயனுக்கு முதலமைச்சராக விளங்கிய மூதறிவாளர். இவருடைய வரலாற்றைக் கொற்றவன்குடி உமாபதி சிவனுர்

சேக்கிழார் சுவாமிகள் புராணம் என்னும் பெயரால் ஆக்கித் தந்துள்ளார். உமாபதி சிவனுர் பதினன்காம் நூற்ருண்டில் வாழ்ந்த பைந்தமிழ்ச் சைவசித்தாந்தப் பேரறிஞர். இவர் சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினன் கனுள் எட்டு நூல்களை இயற்றியவர். இவர் சங்கற்ப நிராகரணம் என்னும் தமது நூலை இயற்றிய காலம் சாலிவாகன சகாப்தம் கஉகூரு என்று குறித்துள்ளார். அது கி. பி. 1313 ஆகும். சேக்கிழார் பெரியபுராணம் இயற்றிய காலம் இரண்டாம் குலோத்துங்கன் கால மாகிய பதினேராம் நூற்ருண்டின் இறுதி என்று சரித ஆசிரியர்கள் கணித்துள்ளனர். ஆகவே, சேக்கிழார் காலத்திற்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகட்குப் பிற் பட்டவர் உமாபதிசிவனுர் என்று கொள்ளலாம். அவர் இயற்றிய சேக்கிழார் புராணம் உண்மையான வரலா றென்று ஒப்புக்கொள்ளுதற்கு இடமுண்டு. அதனை வலியுறுத்தும் கல்வெட்டுச் சான்றுகளும் பலவுள. ஆதலின் உமாபதி சிவனுர் உரைக்கும் சேக்கிழார் வரலாற்றை நோக்குவோம்.

### சேக்கிழார் புராணம் செப்புவது

'சான்றேர் உடைத்து' என்று ஆன்றேரால் போற்றப் பெற்ற தொண்டைநாடு பண்டை நாளில் இருபத்து நான்கு கோட்டங்களைக் கொண்டு விளங் கிற்று. அவற்றுள் புலியூர்க் கோட்டம் என்பதொன்று. அதன் உட்பகுதியாகக் குன்றைவளநாடு குலவிற்று. அப்பகுதியில் நிலவிய ஊரே குன்றத்தூர் என்பது. இவ்வூரில் வாழ்ந்த தொண்டை மண்டல வேளாளர் மரபில் தோன்றியவரே அருண்மொழித்தேவர் என்னும் அமைச்சர் ஆவர்.

காடு கெடுத்து நாடாக்கிய கரிகால்வளவன் தொண்டை நாட்டை வளப்படுத்த நாற்பத்தெண்ணுயிரம் குடிகளை அந்நாட்டில் குடியேற்றினுன். அக்குடிகளே தொண்டை மண்டல வேளாளர் எனப்படுவர். இவ்வேளாளருள்ளே கூடல் கிழார், புரிசை கிழார், வெண்குளப்பாக்கிழார், சேக்கிழார் முதலிய சில குடியினர் சிறந்து விளங்கினர். அமைச்சராகிய அருண்மொழித்தேவர் சேக்கிழார் குடியில் அவதரித்தவர். அவருக்குப் பாலருவாயர் என்ெருரு தம்பியாரும் இருந்தனர்.

அருண்மொழித்தேவர் அமைச்சராதல்

இளம்பருவத்திலேயே பலதுறை நூல்களையும் கற்றுணர்ந்த கலைஞராக விளங்கிய அருண்மொழித் தேவரின் ஆற்றலைப் பலர் வாயிலாகவும் அநபாய சோழ மன்னன் கேட்டுணர்ந்தான். அவரைத் தனது அரசவைக்கு வரவழைத்து முதலமைச்சர் பதவியை மனமுவந்து கொடுத்துதவினுன். அவருடைய ஆட்சித் திறங்கண்டு வியந்து, 'உத்தம சோழப் பல்லவன்' என்ற உயர்ந்த பட்டத்தையும் வழங்கிப் பாராட்டினுன்.

சிந்தாமணி சிந்தை கவர்தல்

அந்நாளில் சோழன் அநபாயன் கங்கை கொண்ட சோழபுரத்தைத் தலைநகராகக் கொண்டு நாட்டைப் புரந்து வந்தான். அவனது ஆட்சியில் அமைச்சுரிமை பூண்ட அருண்மொழித்தேவர் சிறந்த சிவப்பற்றுடையாராதலின் சோழ நாட்டுச் சிவத்தலங்களுள் ஒன்ருகிய திருநாகேச்சுரம் என்ற பெருநகரில் இருந்து தம் அரசியல் அலுவல்களை நடத்திவந்தார். இச்சமயத்தில் தான் சமண காவியமாகிய சீவக சிந்தாமணி, நாடெங்

கும் பரவத் தொடங்கியது. கற்ருேரெல்லாம் பற்றுடன் அந்நூலைப் படித்து இன்புற்று வந்தனர். பொய்யே புனைந்துரைக்கும் அந்நூல் கதையினை மன்னனும் மக்களும் மகிழ்ந்து கேட்டனர். நெல்லிருக்கவும் உமியைக் குத்திக் கை வருந்துவது போலவும், கறவைப் பசு இருக்கவும் மலட்டுப் பசுவைக் கறந்து மனந்தளர் வது போலவும், குளிர்ந்த சோலை வழியிருக்கவும் சேறு நிறைந்த குழியில் விழுந்து அழுந்துவது போலவும், இன்சுவைக் கரும்பிருக்கவும் இரும்பைக் கடிப்பது போலவும், விளக்கிருக்கவும் மின்மினியிடத்தே தீக் காய்ந்தவாறு போலவும் சோழநாட்டு மக்கள் அனை வரும் சிந்தாமணிக் காவியத்தில் தங்கள் சிந்தையைச் செலுத்தினர்.

### அநபாயன் சிவபத்தன்

சோழ மன்னனுகிய அநபாயன் சிறந்த சிவ பத்தன். தில்லைக் கூத்தப் பெருமானிடத்து எல்லையற்ற பத்தி பூண்டவன். இவன் புவனமுழுதுடையாள் என்ற இராசமாதேவியுடன் தில்லைக்குச் சென்று கூத்தப் பெருமானை வழிபட்டான். ஆங்குத் தேரோடும் திரு வீதிகளைப் பொன்னகரப் பெருவீதிகளாகப் பொலிவுறச் செய்தான். கூத்தப் பெருமான் திருநடம் புரிந்தருளும் பேரம்பலத்திற்குப் பொன்வேய்ந்து புதுப்பித்தான். இத்தகைய அரசர் பெருமானைக் 'கூத்தப் பெருமான் திருவடித் தாமரையில் உள்ள தேனைப் பருகும் ஈப் போன்றவன்' என்று திருவாரூர்க் கல்வெட்டுக் குறிக் கின்றது.

### அமைச்சர் அறிவுரை

'சிவனேசச் செல்வனுய் விளங்கும் அநபாயன் சமண காவியமாகிய சிந்தாமணியிடத்து மிகுந்த பற்றுக்

கொண்டுள்ளான்; அதனையே 'ஓதியும் ஓதக்கேட்டும் உவகை வெள்ளத்தில் திளைக்கிருன்' என்ற செய்தியை அமைச்சராகிய அருண்மொழித்தேவர் அறிந்தார். நன்மை பயக்கும் உண்மைகளை அரசர்க்கு அறிவுறுத்த வேண்டுவது நல்லமைச்சர் கடனுதலின், உடனே அருண்மொழித்தேவர் அநபாயனை அணுகினர். "அரசே! நீவிர் சின்னுட்களாக இடையருது ஓதியும் ஓதக்கேட்டும் இன்புற்றுவரும் காவியம் சமண சமயத்தைச் சார்ந்தது. இல்லதைப் புனைந்துரைக்கும் பொய்ந்நூல் அது. மன்னன் ஒருவன் மகளிர் எண்மரை மணந்து காதல் வாழ்வு நடத்திய காமக்கதை. அது இம்மைக்கும் மறுமைக்கும் எள்ளளவு பயனும் தாராது. அருள்வளம் கொழிக்கும் சிவகதைகள் எண்ணிறந்தன உள. அவை இருமைக்கும் உறுதியைத் தரும். அவற்றை நீவிர் கற்றலும் கேட்டலும் வேண்டும். இன்றேல் நம் நாட்டிற்கு ஒவ்வாத புறச்சமயம் இங்குப் புகுந்துவிடும். இதனை நீவிர் அறிந்தருளல் வேண்டும்," என்று பணிவுடன் அறிவுரை பகர்ந்தருளினர்.

### அரசன் வேண்டுகோள்

அமைச்சரின் அறிவுரை கேட்ட அநபாயன் "அங்ஙனமாயின் இருமைக்கும் பெருநலம் பயக்கும் சிவ கதை யாது? அதனைக் கற்றுணர்ந்த புலவோர் யாவர்? அதுவும் சிந்தாமணியைப் போல் தோன்றிய கற்பனைக் கதையோ? அன்றிப் பழங்கதையோ? அதற்கு முதல் நூல் உளதோ? அதனைச் சொன்னவர் யார்? அது தவம் பயக்கும் அருட் கதையோ? தவஞ் செய்து தண்ணருள் பெற்ற புண்ணியர் கதையோ? விளக்கமாக எடுத்துரைக்க" என்று வேண்டினன்.

### அமைச்சர் சிவகதை விளக்குதல்

அரசன் விருப்புடன் கேட்கும் சிறப்பை அறிந்த அமைச்சராகிய அருண்மொழித்தேவர், "அரசே! அம்பலக்கூத்தன் அடியார் பெருமையை அப்பெருமானே அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதினொரு திருப்பாட்டுக்களையுடைய திருத்தொண்டத் தொகைப் பதிகத்தை அருளியுள்ளார். அப்பதிகத்திற்குத் திருநாரையூரில் எழுந்தருளிய பொல்லாப் பிள்ளையார் பொருள்விரித்தருளினர். அதைக் கேட்ட நம்பியாண்டார் நம்பி 'திருத்தொண்டர் திருவந்தாதி பாடியுள்ளார். அதனைத் திருமுறைகண்ட சோழனாகிய இராசராசதேவன் முதலாகப் பலரும் பாராட்டியுள்ளனர். அவற்றால் விரிக்கப்பெறும் திருத்தொண்டர் வரலாறுகளே இருமைக்கும் உறுதி விளைக்கும் உயர்வுடையன," என்று விளக்கமாக உரைத்தருளினர். 'அத்தகைய அடியார்களின் அருள் வரலாற்றை முறையாக எடுத்து இயம்புக' என்று அரசன் அமைச்சரை வேண்டினான். அருண்மொழித்தேவரும் அடியார்களின் வரலாற்றை விரித்துரைத்தார்.

### அமைச்சர் காவியம் அமைத்தல்

அமைச்சர் கூறிய அருள் வரலாறுகளைக் கேட்டு ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிய அநபாயன், "உலகம் உய்யுமாறு இவ்வரலாறுகளைப் பெருங்காவியமாக அமைத்துத் தருவீர்," என்று வேண்டினான். அவருக்கு வேண்டும் பொருள்களையெல்லாம் கொடுத்துத் தில்லையில் சென்று தங்குமாறு செய்தான். தில்லை வந்தடைந்த அமைச்சர் திருக்கோவிலை அடைந்து கூத்தப் பெருமான் குரைகழலைப் பணிந்தார். 'அடிகளே!

உனது அடியார்சீர் அடியேன் உரைத்திட அடி எடுத்து இடர்கெடத் தருவாய்,' என்று திருவருளை வழுத்தி வணங்கினர். அவ்வேளையில் அம்பலக்கூத்தன் திருவருளால் 'உலகெலாம்' என்ற ஒலியொன்று பேரொலியாக வானில் எழுந்தது. அவ் ஒலியினைக் கேட்டு எல்லோரும் உச்சிமேல் கரங்களைக் குவித்து வணங்கியவராய் உள்ளம் உருகினர்.

அன்றுமுதல் அமைச்சராகிய அருண்மொழித் தேவர் சிவக்கோலம் தாங்கி ஆங்குள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் அமர்ந்து திருத்தொண்டர் புராணத்தைப் பாடத் தொடங்கினர். சின்னளில் புராணம் நிறைவெய்தியது. தில்லையில் அருண்மொழித்தேவர் ஆற்றி வரும் பணியினை ஒற்றர் வாயிலாகவும் தூதர் வாயிலாகவும் இடையிடையே தெரிந்து இன்புற்ற அநபாயன், புராணம் நிறைவெய்திய நற்செய்தி கேட்டுப் பெருமகிழ்ச்சியுடன் படைகள் புடைசூழத் தில்லையை அடைந்தான். பொன்னம்பலக் கூத்தன் முன்னர் விழுந்து பணிந்தான். அப்பொழுது எல்லோரும் கேட்க வானில் ஓர் ஓசை எழுந்தது.

பெரியபுராண அரங்கேற்றம்

இச் சேக்கிழான் நம் தொண்டர்களின் சிறப்பை, நாம் ' உலகெலாம் ' என்று அடியெடுத்துக் கொடுக்க, அதனையே தொடக்கமாகக் கொண்டு நூலைச் செய்து முடித்துள்ளான். நீ அதனைக் கேட்பாய்.' என்று ஊக்கமான திருவாக்கொன்று இறைவன் திருச்சிலம்பொலியுடன் வானில் எழுந்தது.

அது கேட்ட அநபாயன், ' அருண்மொழித்தேவர் விரித்துரைத்த தொண்டர் வரலாற்றைக் கேட்பதற்கு

எண்டிசையோரும் திரண்டு வருக! அடியவர்கள் எல்லோரும் கடுகி வருக!' என்று ஆட்களையும் ஓலைகளையும் அனுப்பினான். தில்லையில் சிவனடியார் திருக்கூட்டம் பெருங்கடல்போலத் திரண்டது. எங்கும் வேதியர் வேதமுழக்கும் மூவர் தேவாரத் திருமுழக்கும் சிவநாமப் பெருமுழக்கும் இடிமுழக்கைப்போல முழங்கிக் கொண்டிருந்தன. சித்திரைத் திங்கள் திருவாதிரை நாளில் திருத்தொண்டர் புராணத்தை அருண்மொழித் தேவர் அரங்கேற்றத் தொடங்கினார். எதிராண்டு சித்திரைத் திருவாதிரையில் அரங்கேற்றம் நிறைவேறிற்று.

### தில்லையில் சேக்கிழார் பவனி

திருத்தொண்டர் புராண அரங்கேற்றம் முடிந்ததும் அந்நூலை மன்னன் பொற்பேழையில் வைத்தான். தில்லைவாழ் அந்தணர்கள் அதனைச் சிவமூல மந்திரத்தால் அருச்சனை செய்தனர். இன்று முதல் இதுவும் ஒரு தமிழ்வேதம் என்று மன்னன் பாராட்டினான். அப் பொற்பேழையினை அரசன் தனது பட்டவர்த்தனக் களிற்றின்மேல் ஏற்றினான். புராணம் பாடிய அமைச்சராகிய அருண்மொழித்தேவரையும் அவ் யானையின்மீது அமரச் செய்து, தான் அவருக்குப் பின்னால் அமர்ந்து இரு கரங்களாலும் அமைச்சருக்கு வெண்கவரி வீசினான். தில்லைத் திருவீதிகளில் வலமாக வந்தான். 'இதுவன்றோ நான் செய்த நற்றவத்தின் பயனாகும்,' என்று சொல்லி இன்புற்றான்.

### மக்கள் பாராட்டு

மன்னன் கவரி வீச, மதயானையின்மீது இவர்ந்து வரும் மதியமைச்சராகிய அருண்மொழித்தேவரைக்

கண்டு மகிழ்ந்த மக்களெல்லாம், "இச் சேக்கிழார் பெரு மானுக்கு, இராமாயணத்தை வடமொழியில் தந்த வான்மீகி முனிவனும் இணையாகான்; பாரதத்தை வட மொழியில் பாடிய வேதவியாசனும் நேராகமாட்டான்; ஆயிரம் நாப்படைத்த ஆதிசேடனும் ஈடாகமாட்டான்; பொதியத்தமர்ந்த முனிபுங்கவனும் இவருக்கு நிக ராகான்," என்று பலவாறு பாராட்டினர்.

அமைச்சருக்குப் பட்டமளித்தல்

தில்லைத் திருவீதிகளில் சேக்கிழாரை யானையின் மீது ஏற்றிப் பவனி கொணர்ந்த அரசன், அவருக்குத் 'தொண்டர் சீர் பரவுவார்' என்ற பட்டத்தை வழங் கினான். திருத்தொண்டர் புராணத்தைப் பன்னிரண் டாம் திருமுறையாகச் சேர்க்குமாறு செப்பேட்டில் வரைந்தான். 'இன்று முதல் சைவத் திருமுறைகள் பன்னிரண்டாகும்' என்று நாடெங்கும் பறையறையப் பணித்தான். அவருக்கு ஞானமுடி சூட்டி அடிபணிந்து வணங்கினான்.

அதன் பின்னர்ச் சேக்கிழார் தம் அமைச்சுப் பதவி [illegible]ருந்து விலகி ஓய்வு பெற்றார். தமது ஊராகிய குன்றத்தூரை அடைந்தார். ஆங்குத் திருநாகேச்சுரம் திருக்கோவிலைப் போன்றதொரு திருக்கோவிலை [illegible]து வழிபட்டு வந்தார்.

பெற்றோரும் இயற்பெயரும்

இத்தகைய சேக்கிழார் பெருமானின் பெற்றோரைப் பற்றி உமாபதி சிவனார் தமது நூலில் ஒன்றும் குறிப் பிடவில்லை. சேக்கிழாரின் தந்தை வெள்ளியங்கிரி முதலியார் என்றும், தாய் அழகாம்பிகை என்றும் காது வழிச் செய்தியொன்று உலவி வருகிறது. இவரது

இயற்பெயர் அருண்மொழித்தேவர் என்றே உமாபதி சிவனார் உரைத்துள்ளார். ஆனால் திருமழபாடிச் சிவன் கோவிலிலுள்ள கல்வெட்டு ஒன்றில் 'ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத் தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் இராமதேவனான உத்தம சோழப் பல்லவராயன்' என்று சேக்கிழார் குறிக்கப்படுகின்றார். ஆதலின் சேக்கிழாரது இயற் பெயர் 'இராமதேவன்' என்று கல்வெட்டு ஆராய்ச்சி யாளர் சொல்லுவர்.

சேக்கிழார் புலமைச் சிறப்பு

சேக்கிழார் இளமையிலேயே செந்தமிழ் நூல்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்தவராதல் வேண்டும். அவர் பொதுமறையாகிய திருக்குறளைப் போற்றிக் கற்றிருத் தல்வேண்டும். அதனாலேயே அநபாய சோழன் தன் அவையிலிருந்தோரை வினவிய மூன்று வினாக்களுக்கும் ஏற்ற விடைகளைத் தாம் கேட்டவளவில் ஏட்டில் எழுதி அனுப்பினார். நிலம், மலை, கடல் ஆகிய மூன்றினும் பெரியன யாவை? என்பதே அரசன் வினா. சேக் கிழார் இதற்கு ஏற்ற விடைகளாக அமைந்த மூன்று திருக்குறட்பாக்களையே எழுதியனுப்பினார்.

*'காலத்தாற் செய்த நன்றி சிறிதெனினும்*
*ஞாலத்தின் மாணப் பெரிது.'*

*'நிலையில் திரியா(து) அடங்கியான் தோற்றம்*
*மலையினும் மாணப் பெரிது.'*

*'பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்*
*நன்மை கடலிற் பெரிது.'*

அநபாயன் தனது வினாவிற்கேற்ற விடைகளாக அமைந்த திருக்குறட்பாக்களைக் கண்டு வியந்தான். அவற்றை அறிந்து எழுதியனுப்பிய அறிஞராகிய சேக்